Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 175, 176.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீவரரங்கபெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சோபகிருதுஸு ஆடி, ஆவணிமீ 1963ஸு ஆகஸ்டு, ஸெப்டம்பர்மீ

# ஸ்ரீ ராமாநுஜன். 175, 176.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஆ ஆகஸடு & செப்டம்பர்மீ<br>சோபகிருதுஆ ஆடி–ஆவணிமீ | ஸஞ்சிகை 7, 8 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—64

ஆழிவண்ணன் தன்விசய மானவைமுற் றுங்காட்டி *
வாழிதனு லென்று மகிழ்ந்துநிற்க *—ஊழிலவை
தன்னையின்று போல்கண்டு தானுரைத்த மாறன்சொல் *
பன்னுவரே நல்லது கற்பார்.

| | |
|---|---|
| ஆழி வண்ணன் | —கடல் வண்ணனான எம்பெருமான் |
| தன் விசயம் ஆனவை முற்றும் காட்டி | தன்னுடைய விஜய பரம்பரைகள் முழுவதும் காட்டி |
| இதனால் வாழ் என்று | இவற்றையனுபவிப்பதனால் வாழ்ந்து போமென்று (ஆழ்வாரை நோக்கிக்) கூறி |
| மகிழ்ந்து நிற்க | —உகந்திருக்க. |
| ஊழிலவை தன்னை | பழையனவாய்க் கழிந்த அந்த விஜயாபதானங்களை |
| இன்று போல் கண்டு | இன்று நடந்தவைபோல் ஸாக்ஷாத்கரித்து |
| தான் உரைத்த மாறன் | தாம் அநுபவிப்பதற்குப் போக்குவீடாகப் பாசுரமருளிச்செய்த ஆழ்வாருடைய |
| சொல் | —ஸ்ரீ ஸூக்திகளை |
| பன்னுவரே | —அநுஸந்திப்பவர்களே |
| நல்லது கற்பார் | —நல்ல நூல்களைக் கற்பவராவர். |

* எம்பெருமான் ஆழ்வாரை ஒருவாறு தரிப்பிக்கவேண்டித் தன்னுடைய அபதானங்களாகிய மூவுலகளத்தல், கடல் கடைதல், நிலமிடத்தல், பிரளயம் காத்தல், பாரதம் கைசெய்தல், முதலிய சரித்திரங்களைக் காட்டிக்கொடுத்து 'ஆழ்வீர்! இவற்றைப் பேசி யநுபவித்து வாழக்கடவீர்' என்றருளிச்செய்ய, ஆழ்வாரும் அவற்றையெல்லாம் தற்காலத்திற்போலக் கண்டுகளித்துப்பேசியநுபவித்தார் * ஆழியெழ வென்னும் பதிகத்தில். 'நல்லது கற்பார் மாறன்சொல் பன்னுவர்' என்று அந்வயித்து, நல்ல ஸ்ரீஸூக்திகளைக் கற்க விருப்பமுடையவர்கள் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக் கற்பர்கள் என்றுமுரைக்கலாம்.'

* வெள்ளைச்சுரிசங்கென்னும்* கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வாருடைய பதற்றம் அளவுகடந்திருந்தது. *மண்திணி ஞாலமுமேழ்கடலும் நீள்விசும்புங் கழியப் பெரிதாகத் தாங்கொண்ட காதலை வெளியிட்டு, இப்படிக் கரைபுரண்ட காதலையுடைய நான் இங்கே இருக்ககில்லேன், தென்திருப்பேரெயிலில் சென்று சேர்வேனத்தனையென்று சொல்ல, தோழிமார், தாய்மார் முதலானோர் இது ஸ்வரூபஹானியென்று சொல்லித் தடுத்தவளவிலும் கேட்கமாட்டாதவராய்ப் பதறியே நின்றாராழ்வார். *தென்திருப்பேரெயில் சேர்வன் நானே* என்றும் *சேர்வன் சென்றே* என்றும் திண்ணமாகக் கூறின ஆழ்வார் புறப்பட்டுச் செல்லப் பார்த்தார். *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்னும்படியான நிலைமையிலே நின்றிருந்தாராகையாலே புறப்பட்டுச் செல்ல வலிமையற்றிருந்தார். வாய்கொண்டு பேச

முடியாதபடி பலமழிந்து கிடந்தவர்க்கு ஒரு வழியாலே பலமுண்டாக்கவேணுமென்று பார்த்தானெம்பெருமான். தன்னுடைய விஜயாபதான பரம்பரைகளைக் காட்டிக் கொடுத்தால் அவற்றைக் கண்டு பலம்மிக்குத் தரித்திருப்பர் என்று கருதி உலகளந்தது, கடல் கடைந்தது, நிலமிடந்தது, பிரளயத்திலே உலகமுண்டது முதலான அபதானங்களைக் காட்டிக் கொடுத்து, ஆழ்வீர்! இவற்றை யநுஸந்தித்துத தரித்து வாழும்' என்ன, ஆழ்வாரும் அவ்வபதானங்களை, ஸமகாலத்திற்போலே கண்டு பாசுரந்தோறும் ஒவ்வொரு அபதானமாகப் பேசித் தரிக்கிறார் *ஆழியெழவென்னும் திருவாய்மொழியில் என்றதாயிற்று. .... ... (64)

## திருவாய்மொழி நூற்றந்தாதி—65

கற்றோர் கருதும் விசயங்க ளுக்கெல்லாம் *
பற்றும் விபவகுணப் பண்புகளை * —உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்த மாறன்சொல் *
பண்ணிலினி தானதமிழ்ப் பா.

| | | | |
|---|---|---|---|
| கற்றோர் கருதும் | —கற்றவர்களால் தியானிக்கப் படுகிற | மண்ணில் உள்ளோர் தம் இழவை | இம்மண்ணுலகத்தவர்கள் பகவதநுபவத்தை யிழக்கும் படியை |
| விசயங்களுக்கு எல்லாம் பற்று ஆம் | வெற்றிச் சரிதைகளுக்கெல்லாம் ஆலம்பனமாயிருக்கிற | வாய்ந்து உரைத்த | —பொருத்தமாக எடுத்துரைத்த |
| விபவகுண பண்புகளை | விபவாவதாரகுண ஸ்வபாவங்களை | மாறன் சொல் | — ஆழ்வாரது அருளிச் செயலானது |
| உற்று உணர்ந்து | —ஆராய்ந்தறிந்து | பண்ணில் இனிது ஆன தமிழ் பா | பண்ணிசையில் பரமபோக்யமான த்ராவிட வேதம். |

* கீழ்த்திருவாய்மொழியாகிய * ஆழியெழவெனும் பதிகத்தில் அநுஸந்தித்த விஜய பரம்பரைக்கு அடியான விபவாவதார குணஸ்வபாவங்களை அநுஸந்தித்து 'படுக்கைக் கீழே தனங்கிடக்கக் கால் வீங்கிச் சாவாரைப் போலே இப்படிப்பட்ட மஹாநிதி யுண்டாயிருக்க இவ்வுலகத்தவர்கள் இத்தையிழந்து அனர்த்தப்படுவதே!" என்று ஸம்ஸாரிகளினிழவுக்கு வெறுத்து உரைத்த பதிகம் *கற்பாரி ராமபிரானை யென்பது.

கீழ்த்திருவாய்மொழியின் நிகமனப் பாசுரத்தில் *வென்றிதரும்பத்தும் மேவிக் கற்பார்க்கே* என்றதில் நோக்காக "விசயங்களுக்கெல்லாம்" என்றருளிச் செய்தபடி. விசயங்களென்றது விஜயாபதாநங்களென்றபடி. — ... (65)

---

ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்.

99 சேலம் ப. கு. நன்னையா என்னும் பெரியாரும், 100 Sri S. ஸ்ரீநிவாஸன் என்னும் பெரியவரும் ஜீவியசந்தாதாரர்களாகச் சேர்ந்தார்கள்

| | | |
|---|---|---|
| 101 | செவ்வாபேட்டை, ஸ்ரீவைஷ்ணவ ரத்னம் தா. மாணிக்க நாய்க்கர் | 10 00 |
| 102 | நல்ல கவுண்டன் ஹள்ளி அனந்தாழ்வான் பாகவதர் | 5 00 |
| 103 | G. நாராயணன் குகை சேலம் | 5 00 |
| 104 | A. N. ஸ்ரீநிவாஸகுப்தா சேலம் | 5 00 |
| 105 | Balaraman Madras | 5 00 |
| 106 | S. Sampathkumar Advocate | 5 00 |
| 107 | V. Rukmangadan | 5 00 |
| 108 | S. Kulasekharan | 5 00 |
| | | 5 00 |

(தொடரும்)

# கோயில் மணவாளமாமுனிகள் ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவச் சிறப்பு.

(ப்ர-அ.)

திருவரங்கம் பெரிய கோயிலில் மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் சிலபலவருஷங்களாகவே ஜீர்ணோத்தாரணத் திருப்பணிகள் நடந்து கொண்டிருந்ததை உலகமறியும். பெரும்பாலும் பல நாடுகளிலுள்ள பக்தவர்க்கங்களின் நன் கொடையாகக் கிடைத்த தொகையைக் கொண்டே திருப்பணிகள் நடந்துள்ளன. ஸுமார் பதினாயிரம் ரூபாய்க்கு மேலாகவே திருப்பணியில் செலவாகியிருக்குமென்று தெரிய வருகிறது. சென்ற உத்தராயணத்திலேயே ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் நடத்த உத்தேசிக்கப்பட்டிருந்தது. சில பல ஸௌகரியங்களை யுத்தேசித்தே நிகழும் ஆவணி மாதத்தில் முஹூர்த்தம் நிச்சயிக்கப்பட்டிருந்தது. அதாவது, ஆவணிமீ 5-ஆம் தேதியிலிருந்து 9-ஆம தேதிவரை (21-8-63 to 25—8—63) இந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் நடத்தபடுவதாக பத்ரிகைகள் ப்ரசுரமாகி நாடெங்கும் பரவியிருந்தன.

ஜீர்ணோத்தாரணக் கமிட்டியென்று சில வருஷங்களாகவே ஏற்பட்டிருந்தபடியால் அந்தக் கமிட்டியே ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவக் கமிட்டியாகவும் அமைந்தது. ஸ்ரீரங்கத்தில் ஸுப்ரஸித்தரான டாக்டர். ப்ரஹ்மஸ்ரீ P. E. ஜம்புநாதய்யரவர்களை அறியாதாரில்லை. இப்பெரியார் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஜனித்தவரல்லரெனினும் இவரைப்போன்ற ஸ்ரீவைஷ்ணவாபிமாநி இல்லையென்றே சொல்லலாம். இப்பெரியார் பகவத் விஷயம் திருமந்திரார்த்தம் ஸ்ரீவசந பூஷணம் ஆசார்யஹ்ருதயம் முதலான ஸத்ஸம்ப்ரதாய க்ரந்தங்களை ஸதாசார்ய ஸன்னிதானத்தில் வரியடைவே கற்றவர். மணவாளமாமுனிகள் பக்கலிலே விசேஷித்த பக்தியையே நிரூபகமாகக் கொண்டவரென்றால் மிகையாகாது. ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்க வரும்போதெல்லாம் மணவாளமாமுனிகளையும் ஸேவித்துப்போவது இவருடைய வழக்கம். ப்ரக்ருத ஜீர்ணோத்தாரணத் திருப்பணியைத் தொடங்கி வைத்தவரே இப்பெரியாரென்று கேள்வி. இவர் தம்முடைய தீவிரமான சிரத்தையினால் ஜீர்ணோத்தாரணத்தை மிக மேம்பட்ட முறையில் தலைக் கட்டிவைத்தார். ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவக் கமிட்டியிலும் இப்பெரியவரே தலைவராயிருந்து இதையும் வெகு சிறப்பாக நிறைவேற்றிவைத்தார்.

ஜீர்ணோத்தாரணவகையில் எவ்வளவு தொகை செலவாயிற்றோ அவ்வளவுக்கு மேலாக ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்திற்குச் செலவாயிற்றென்பதை நேரில் அநுபவித்தோம். மாமுனிகளின் ஸன்னிதிக்காரரான ஸ்ரீ. உ. வே. கோமடம் ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி, மாமுனிகள் ஸன்னிதி பரிபாலனத்தையே நித்யநைமித்திகாதி ஸகல க்ருத்யமுமாகக் கொண்டிருக்கிற ஸ்ரீ வேங்கடாசாரியர் ஸ்வாமி, கற்குளம் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான [ஸ்ரீஸூக்திரத்னகர] இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமி, அவருடை திருத்தம்பியாரான திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகாசாரியர்ஸ்வாமி ஆக இந்நால்வரும் டாக்டரவர்களுக்கு "அத்வாரௌபாஹவ:" என்னும்படியாகவே யிருந்து ஸ்ரீ. உ. வே. மெ. ஸுந்தரராஜாசார்யஸ்வாமியையும் துணைகொண்டு கார்ய நிர்வாஹத்தை ஒழுங்குபடச் செய்தார்கள்.

## இனி ஸம்ப்ரோக்ஷணச் சிறப்புகளைத் தெரிவிப்போம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களில் அத்யாபகர்களாயும் வேதம் வல்லார்களாயும் வித்வான்களாயும் பரம பக்தர்களாயு முள்ளவர்களுக்கெல்லாம் அழைப்புப் பத்திரிகைகள்

அனுப்பப் பட்டிருந்தன. ஸ்வாமிகளும் பக்தபாகவதர்களும் எண்டிசைகளிலிருந்தும் வந்து குழுமியிருந்தனர். அந்த நிலைமையைக் காணுந்தோறும் "ஸா நம் ஸா நஸயோத்யாயா ராஜமார்க்க ஸமந்தத:। ஸஹஸ்ர ஹிஸம்பாயா: கௌதூஹலிஜனை நவாஜதா:- ப்ருந்த ப்ருந்த மயோத்யாயாம் ராஜமார்க்காஸ் ஸமந்தத:, பபூவுரபிஸம்பாதா: குதூஹலிஜனை: வ்ருதா:." என்கிற ஸ்ரீ ராமாயணச்லோகமே நினைவுக்கு வந்தது. பெரியாழ்வார் "தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கந் திருப்பதி" யென்று திருவாய் மலர்ந்தருளினபடி ஸர்வதோதிக்கமாகக் குழாங்கூடும் ஸந்தர்ப்பங்கள் ஸ்ரீரங்கத்தில் பலவுண்டு; அந்த ஸந்தர்ப்பங்களில் கூடும் குழாம் அவிலக்ஷணர்களும் கலந்து மலிந்திருக்கும். ஆகுஜத ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்தில் கூடின குழாத்தில் அவிலக்ஷண வ்யக்தி ஒன்றுகூட காணக்கிடைக்காது. * மணவாள மாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப்போதுகளை யுன்னிச் சிரத்தாலே தீண்டும் பரமவிலக்ஷண வ்யக்திகளே பலவாயிரக் கணக்கில் மலிந்திருந்த திவ்யகோஷ்டிகளைக் காண விழந்தவர்கள் இழந்தவர்களே. உத்தரவீதிகள் சித்திரைவீதிகள் அடையவளைந்தான்வீதிகள் ஸ்ரீரங்கநாத தேவஸ்தான பரிஸரங்கள் எங்கும் ஸ்ரீவைஷ்ணவத்திரளே நிரம்பியிருந்த அதிசயம் எதிர்பார்த்திருந்ததன்று, இனி எதிர்பார்க்கக்கூடியதுமன்று.

21—8—63 புதன்கிழமை மாலை 4 மணி முதல் 25—8—63 இரவு வரையில் நடந்த மஹோத்ஸவ வைபவங்களைப் பூர்த்தியாகப் பேசுவதோ எழுதுவதோ உள்ளபடி அஸாத்யமானதே. வெகு சுருக்கமாகத் தெரிவிக்கிறேமிங்கு.

1. ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதி பட்டாசார்கள் [அர்ச்சகர்கள்] இந்த ஸம்ப்ரோக்ஷணச் சடங்குகளில் அந்வயித்து ஹோமாதிகாரியங்களை வெகு சிரத்தையுடன் யதாவிதி நடத்தியது முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது.

2. புதன்கிழமை மாலை 4 மணிக்குமேல் 7 மணி வரையில் திருக்காவிரியிலிருந்து திருமஞ்சனம் யானையின்மீது உபநிஷத் கோஷத்துடன் வந்து சேர்ந்து அநுஜ்ஞை பெற்றுயிற்று. அதற்குமேல் இரவு 9 மணிக்குள்ளாக வெளியாண்டாள் ஸன்னிதியில் ம்ருத்ஸங்க்ரஹணமாகி வேதபாராயண கோஷ்டியுடன் ஸன்னிதி வந்து சேர்ந்து ஹோமாரம்பமாயிற்று.

3. திவ்யப் பிரபந்தம் நாலாயிரமும் ஸ்வப்ரபந்தங்களிரண்டும் ஒரெழுத்து விடாமல் ஸம்பூர்த்தியாக ஸேவித்த அத்யாபக ஸ்வாமிகள் இருநூறு திருநாமங்களுக்குமேல் கோஷ்டியில் அந்வயித்திருந்தார்கள்.

4. ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் இவற்றின் பாராயண கோஷ்டிகளில் நாற்பது திருநாமங்கள் அந்வயித்திருந்தார்கள். இதிஹாஸ புராண ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யாதிவசந கோஷ்டியில் முப்பது திருநாமங்களுக்கு மேல் அந்வயித்திருந்தார்கள். இத்தனை ஸ்வாமிகளும் நெருக்குண்ணமல் எழுந்தருளியிருக்கப் பாங்கான வைசால்யமுடைய மாமுனிகளின் ஸன்னிதியானது 'நாம் ப்ரத்யக்ஷீகரிக்கிற திருமாமணி மண்டபமோ!' என்னும்படியாகவே விளங்கிற்று.

5. ஸன்னிதியுள்ளே நடந்த இந்த பாராயண கோஷ்டிகளின் மாண்பு ஒருபுறமிருக்க ஐந்துநாட்களிலும் மாலை 6 மணி முதல் 7-30 மணிவரை திருவீதி வலம்வந்த ஸ்தோத்ரபாட கோஷ்டியின் வைலக்ஷண்யம் அப்ரமேயமாயிருந்தது. ஏறக்குறைய ஆயிரம் ஸ்ரீவைஷ்ண

வர்களை ஏககாலத்தில் ஸேவிக்கும்படியான வாய்ப்பை அளித்தது இந்த திவ்யகோஷ்டியே. ஆழ்வார் திருவாய் மொழியில் * பொலிக பொலிக பதிகத்தில் லோகத்வீபாந்தரங்களில் நின்றும்போந்த தேவர்குழாங்களைக் கண்டு காப்பிட்டதாக அருளிச்செய்யப்படுகிறது ஆசார்ய ஹ்ருதயத்தில்; அந்தக்குழாங்களே இப்போது மணவாளமாமுனிகளின் மங்களா சாஸன ஸாமஸ்யம் பெற வந்து கூடி "கண்டோங் கண்டோங் கண்டோங் கண்ணுக்கினியன கண்டோம்" என்னும்படி காட்சியளித்ததாகப் பேசுவதில் அதிஶயோக்திலேஶமுமில்லை.

திருக்குருகூர், வானமாமலை, திருக்குறுங்குடி, ஸ்ரீவில்லிபுத்தூர், காஞ்சி, சென்னை, திருநாராயணபுரம், திருநாங்கூர், திருநகரி, சித்ரகூடம், ஸ்ரீபெரும்பூதூர் முதலானவிடங்களி லிருந்து பரிமணிதர்களான வித்வான்கள் பலரும் எழுந்தருளியிருந்தபடியால் அவர்களின் மதுரமான உபந்யாஸங்களைச் செவியாரக்கேட்க பக்தவர்க்கங்களுக்கு நித்யமும் பகலில் மூன்று மணிகாலம் நல்லவாய்ப்பாக அமைந்தது.

7. ததியாராதனைச் சிறப்பைப்பற்றிப் பேசப்புகுந்தாலோ 'அநுபேரின்பவெள்ளம்' என்னவேண்டுமத்தனை. ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கநாராயணஜீயர் மடத்தில் நித்யமும் இரண்டு வேளைகளிலும் [ஸ்த்ரீகளுக்குங்கூட] பரமவிலக்ஷணமான ததீயாராதனம் நடைபெற கமிட்டியார்களே ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த நிர்வாஹத்தின் அதிஶயம் தனிச்சிறப்புற்றது.

8. ஸம்ப்ரோக்ஷண தினத்தன்று காலை பெரியபெருமாள் ஸன்னிதியிலிருந்து கோயில் பரிகரத்தார் மூலமாக மாமுனிகளுக்குக் கிடைத்த பஹுமானச் சிறப்புகள் "ஸ்ரீரங்கநாதன் ஸ்வாசார்ய விஷயத்தில் கிஞ்சித் கரித்து ஸ்வரூபம் நிறம் பெற்றவாறு சால வழகியதே" என்று யாவரும் உகக்கவும் வியக்கவும் அமைந்தன. அன்றுகாலை ஸுப்ரபாத ஸமயம் முதலாகப் பன்னிரண்டு மணி வரையில் ஒவ்வொருவரும் வையத்திலிருப்பதாக நினையாமல் அடியார் நிலாகின்ற வைகுந்தத்திலிருப்பதாகவே நினைத்து "ஸஹ தவாஸ்மாகம் மிதுநஹ்யயந் ஸ்வயஸுதே ஸஹாவீத" என்று ஸ்வாமி ஸாதித்தபடியேயிருந்த விருப்பு ஒன்றே நமது நிதய்யநுஸந்தானத்திலுறியிருப்பது.

9. எழுந்தருளின ஸ்வாமிகளுக்கு ஆஹூதர்கள் அநாஹூதர்கள் என்னும் வாசியின்றிக்கே யோக்யதையைமட்டும் கணிசித்து வேஷ்டி உத்தரீயம், ஸம்பாவனை, வழிச்செலவு ஆக இவை யளிக்கப்பட்டன. இவ்வகையில் மட்டும் ஏழெட்டாயிரம் ரூபாய்க்குமேல் செலவாகியிருக்குமென்பதில்ஐயமில்லை. இத்தகையபெரிய ஸமூஹங்களில் ஸத்பாத்ரங்களிற்போலவே அபாத்ரங்களிலும் குபாத்ரங்களிலும் ஸத்காரங்கள் அந்வயிப்பது பெரும்பாலும் ஆங்காங்குக் காண்பதாகும். இங்கு அங்ஙனன்றிக்கே ஸத்பாத்ரங்களிலேயே விநியோகமானது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது.

10. இந்த வியாஸத்தின் தொடக்கத்தில் குறிப்பிட்ட டாக்டரவர்களும், அவர்க்கு தக்ஷிண பாஹுக்களாகக் குறிக்கப்பட்ட நால்வரும், ஸ்ரீமதித்யாதி உ.வே. அண்ணங்கரர்ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. ஸ்ரீவிலாஸ அச்சுக்கூடத் தலைவர் பண்டிதராஜ மெ. ஸுந்தரராஜாசார்யஸ்வாமி, நூஜிவீடு நடாதூர் சடகோபாசார்யஸ்வாமி முதலானவர்களும் இம்மஹோத்ஸவத்தைப் பரிமளிக்கச் செய்தவர்கள். "பன்னியுரைக்குங்கால் பாரதமாம்." .... .... (*)

## திருக்கண்ணபுரம் ஸம்ப்ரோக்ஷணம்.

திருக்கண்ணபுரம் ஸ்ரீசௌரிராஜப்பெருமாள் தேவஸ்தானத்தில் நெடுநாளாகவே ஜீர்ணோத்தாரணங்கள் நடந்துகொண்டிருந்தன. ஸுமார் லக்ஷத்திருபத்தையாயிரம் ரூபா செலவில் நடந்திருப்பதாகத் தெரியவருகிறது. இங்கு 1-9-63 தேதிமுதல் 6-9-63 தேதி யளவாக ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. இதில் ஒரு நாள் மட்டுமே நாம் அந்வயிக்க ப்ராப்தமாயிற்று. ஸ்ரீரங்கத்தில் நடந்த ஸம்ப்ரோக்ஷணத திற்கு எழுந்தருளியிருந்த ஸ்வாமிகள் பெரும்பாலும் இங்குமெழுந்தருளியிருந்தார்கள்; அங்கு

2

எழுந்தருளாமல் இங்குமட்டும் எழுந்தருளின ஸ்வாமிகளும் சிலருண்டு. இவ்விரண்டு ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவங்களையும் ஸேவிக்கப் பெற்றவர்கள் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸ்தர்களாய் பரிமணிதர்களான ஸகல ஸ்வாமிகளையும் ஸேவித்தவர்களாவர். ... (*)

---

26-8-63 ல் வெளிவந்த தேவஸ்தான பத்திரிகையில் அதனாசிரியர் வெளியிட்ட வியாஸம் வருமாறு:—

## ஸ்ரீ ரங்கம் மணவாள மாமுனிகள் ஸம்ப்ரோக்ஷண வைபவம்

ஆவணி 5 புதன் (21-8-63)-ல் ஆரம்பமாகி 5 நாள் நடந்தது. தெலுங்கு ராஜ்ய மசூலிபட்டணம் குண்டூர் நெல்லூர் முதலான இடங்களிலிருந்தும் மைசூர் திருநாராயணபுரம், திருநெல்வேலி மதுரை ஜில்லாக்களிலிருந்தும், தமிழ் நாட்டில் மற்றும் பல ஊர்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான ஸேவார்த்திகளும் சுமார் 300 வித்வான்களும் வந்திருந்து வைதிக காரியங்களைச் சிறப்பித்து பெருமாள் ஆழ்வார் ஆசார்யாள் முதலானோரை ஸேவித்து ஸம்ப்ரோக்ஷணத்தை விமரிசைப்படுத்தினர். மஹாவித்வான் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி முதலானோருடைய உபந்யாஸங்கள் விசேஷமாயிருந்தன. பிரதிதினம் திருவீதியில் வேதம் ஸ்தோத்ர பாடம் பெரியகோஷ்டி வைபவமாக வலம் வந்தது.

9—8—63 ஸம்ப்ரோக்ஷணத்தன்று பெருமாள் ஸந்நிதியிலிருந்து பட்டு பீதாம்பரம் மாலை சந்தநம் பிரஸாதங்கள் விமரிசையாக வந்து மணவாளமாமுனிகளுக்குச் சாத்தப்பட்டது. ஜீர்ணோத்தாரணத்துக்கு 1000 ரூ. கொடுத்த நாதெள்ள ஸம்பத்து செட்டியார் ஸம்ப்ரோக்ஷணத்துக்கும் பணம்கொடுத்து உதவியதோடு பெருமாளுக்கும் திருப்பரிவட்டங்கள் ஸமர்ப்பித்தார். கோயில் அதிகாரிகள் பெருமாளுக்கு விசேஷ திருவாபரணம் வைரமுடி சாத்தி மஹா ஜநங்களுக்கு தரிசனம் ஸௌகர்யமாகக் கிடைக்கச் செய்தனர்.

இங்கு பெரிய உத்ஸவமான வைகுண்ட ஏகாதசியில் கூடும் கூட்டம் இந்த ஸம்ப்ரோக்ஷணத்துக்கும் கூடியிருந்தது.

ஸ்ரீ வானமாமலை ஜீயர் ஸ்வாமிகள், ஸ்ரீ திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமிகள் இருவரும் விசேஷமாக தநம் ஸமர்ப்பித்து உதவினர். ஸ்ரீமத் ஆண்டவனும் விசேஷ நிவேதனங்கள் ஸமர்ப்பித்தார்.

கோயில் கைங்கர்ய பரர்கள் ஸ்தலத்தார் தீர்த்தக்காரர் முதலான யாவருக்கும் வெளியூர்களிலிருந்து பாராயணங்களுக்கு வந்திருந்த ஸ்வாமிகளுக்கும் வேஷ்டி உத்தரீய ஸம்பாவனைகள் போகவரச் செலவுகள் கொடுபட்டன.

### டாக்டர் பி. ஈ. ஜம்புநாத அய்யர்

ஜீர்ணோத்தரணமும் ஸம்ப்ரோக்ஷணமும் இவ்வளவு அத்புதமாக நடக்கும்படி பாடுபட்டு பணம் வசூலித்து நிர்வாஹம் நடத்தின ஸ்ரீரங்கம் டாக்டர் ஸ்ரீ பி. ஈ. ஜம்புநாத அய்யர் அவர்களுக்கு வைஷ்ணவத்திலும் தென்னாசார்ய ஸம்பிரதாயத்திலும் மணவாளமாமுனிகளிடத்திலும் 40 வருஷமாக உள்ள பக்தியையும் அவர் பெருமாள் ஆழ்வார் ஆசார்யர்கள் விஷயமான கைங்கர்யங்களைப் பலகால் நடத்தி வரும் சிரத்தையையும் அண்ணங்கராச்சார் ஸ்வாமி விவரமாக எடுத்துரைத்தார்.

இந்த வைபவத்தை தரிசிப்பதற்காகவும் நடத்துவதற்காகவும் வந்திருந்த வெளியூர் காரர் உள்ளூர்க்காரர் யாவருக்கும் 5 நாளும் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தில் இரண்டு வேளையும் ததீயாராதனம் சுமார் 5000 பேருக்கு நடந்தது.

### திவ்யப் பிரபந்த அகராதி

நிகழ்ந்த ஸம்ப்ரோக்ஷணத்தில் ஆவணி 9 ஞா. 25—8—63 ல் மஹா வித்வான் ஸ்ரீ அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி திருக்கையில் ஸமர்ப்பித்து வெளியிடப்பட்டது திவ்ய பிரபந்த அகராதி. (ஆக இவ்வளவும் தேவஸ்தான பத்ரிகையின் வியாஸம்.)

ஸ்ரீரஸ்து.
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஸ்ரீமதே நிகமாந்த மஹாகுரவே நம:

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்
எளிய நடையில் தெளிய வெழுதிய மணிப்ரவாள
வியாக்கியானத்தோடு கூடிய

# ஸ்ரீமந்நிகமாந்தமஹாகுரு ஸ்தோத்ரமாலா

மூன்றாவது மலர்.

ஸ்ரீயதோக்தகாரிஸ்தோத்ரம். அஷ்டபுஜாஷ்டகம், காமாஸிகாஷ்டகம்.

சரணாகதிதீபிகை யென்கிற தீபப்ரகாச ஸ்தோத்ரமும்
வரதராஜ பஞ்சாசத்தும் இத்தகைய உரையுடன்
நான்காவது மலராக வெளிவரும்.

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு.

இதன் விலை 60 n-P.

1963.

கிடைக்குமிடம்:—

P. B. ANNANGARACHARYA, L. Kancheepuram.



ஸ்ரீ யதோக்தகாரியெம்பெருமான் திருவவதார மஹோத்ஸவ கோஷ்டி.

சோபக்ருத்ஸு சித்திரை புனர்வஸு.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

அஸ்மத் குருபரம்பராப்யோ நம:

# ஸ்ரீமத்வேங்கடநாதார்ய வைபவ விளக்கம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்தது.

## ஸ்வாமியின் திருவவதாரம்

ஸ்ரீஸ்வாமி திருவவதரித்தவிடம் காஞ்சீ க்ஷேத்ரத்தில் திருத்தண்கா என வழங்கப் பெறும் விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதியின் பரிஸரமாகிய திவ்யஸ்தலம். இவருக்குத் திருத்தகப்பனுர் அநந்த ஸோமயாஜிகள். திருத்தாயார் தோதாத்ரியம்மை. ஆசிரியர் (மாதுலரான்) கிடாம்பி அப்புள்ளார். இராமானுசப் பிள்ளான் என்பவரும் அவரே. திருவேங்கடமுடையானுடைய திருமணியே இவ்வாசிரியராய்த் தோன்றினதாகக் கூறுவர். ஸ்வாமி தாமே தமது ஸங்கல்பஸூர்யோதய நாடக ப்ரஸ்தாவனையில் தம்மைப்பற்றி அருளிச் செய்யுமிடத்து *வித்ராஸிநீ விபுதவைரிவரூதிநீநாம் பத்மாஸநேந பரிசார விதௌ ப்ரயுக்தா, உத்ப்ரேக்ஷ்யதே புதஜநைருபபத்தி பூம்நா கண்டா ஹரேஸ் ஸமஜநிஷ்ட யதாத்மநேதி* என்றருளிய ச்லோகம் இங்கு அநுஸந்திக்கவுரியது. திருநாமகரணம்=இவ்வாசிரியர் திருவேங்கட முடையானுடைய மஹோத்ஸவத்தின் அவப்ருத தினமாகிய புரட்டாசித் திருவோணத்தன்று திருவவதரித்தமை பற்றி ஸ்ரீவேங்கடநாத சர்மா என்று திருநாமம் சாத்தப் பெற்றார். வேதாந்தாசார்யர் என்கிற திருநாமம் பிறகு பட்டப்பெயராகக் கிடைத்தது ஸ்வாமிக்கு. [கலி ஹு 4370, சாலிவாஹந சகஹு 1191, கி. பி. 1268— விபவஸம்வத்ஸரத்தில் இவரது திருவவதார மென்று பெரியார் நிரூபிக்கின்றனர்.] நூறு ஸம்வத்ஸரம் இவ் விபூதியில் எழுந்தருளியிருந்து திருநாட்டுக்கெழுந்தருளினராதலால் இற்றைக்கு ஏறக்குறைய 595 ஆண்டுகட்குமுன் இவ்வாசிரியரது ஜீவிதகாலம் என விளங்கா நின்றது. இதில் மதிபேதமோ மதபேதமோ இருப்பதாகத் தெரியவில்லை. இருக்க நியாயமுமில்லை.

## இளமையில் பெற்ற அநுக்ரஹமும் வித்யாப்யாஸமும்

இவ்வாசிரியர் தமது மாதுலராகிய அப்புள்ளாருடைய அதிமாத்ர ப்ரீதிக்ருப் பாத்ர பூதரா யிருந்துவந்தார். நடாதூரம்மாளுடைய ஸந்நிதியில் ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம் செய்து கொண்டிருந்த அவ்வாசிரியர், நாலைந்து பிராயமுள்ள இவ்வாசிரியக் குழந்தையையும் உடன் அழைத்துக்கொண்டு காலக்ஷேப கோஷ்டிக்குச் செல்ல அம்மாள் இக்குழந்தையின் தேஜோ விசேஷத்தையும் ப்ரதிபாப்ரபாவத்தையும் நோக்கி வியந்து "ஆம் முதல்வனிவன்" என்று விசேஷகடாக்ஷம் செய்தருளினர். இவ்விஷயம் இவ்வாசிரியர் தம்மாலேயே அதிகரண ஸாராவளியின் தொடக்கத்தில் *ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக்த்ருஷ்டேந ஸர்வம்ஸஹநிசிததியா வேங்கடேசேந* என்று பணிக்கப்பட்டது. உரிய காலங்களில் சௌளோபநயநாதி ஸகல ஸம்ஸ்காரங்களும் அடைவே செய்யப்பெற்ற இவர் வேதங்களை ஓதத் தொடங்கினர். வேதமோதின திறமையைப் பற்றி ஆசார்ய சம்புவில் கூறியுள்ளவொரு சுலோகம் மிக அற்புதமானது. *அஹீநாய வேதாநசீலாந்

ஆசார்யாதக்ரஹீ தஸௌ, புநருச்சாரணகாங்க்ஷீ பதாநாம் வேஷ்டநே பரம்* என்பதாம். வேதத்தில் வேஷ்டந பதங்கள் என்று சிலவுண்டு. [ப்ரஜாபதிரிதிப்ரஜா-பதி:; பாகதேயேநேதி பாக-தேயேந: அக்நிஷ்டோமஸாம மித்யக்நிஷ்டோம - ஸாமம்.] என்பவை போன்ற பதங்கள் வேஷ்டந பதங்களாகும். அவை இரட்டித் திரட்டித்தே ஓதவேண்டியவை யாதலால், அத்தகைய வேஷ்டந பதங்களில் மாத்திரம் ஸ்வாமிக்குப் புநருச்சாரணம் ப்ராப்தமாயிற்றே யல்லது மற்றைப் படியுள்ள பதங்களை யெல்லாம் ஸக்ருதுச்சாரண மாத்ரத்தினாலேயே க்ரஹித்தருளினரென்று இவருடைய அதிதர ஸாதாரணமான க்ரஹணதாரண படுத்வம் கூறியவாறு. இவ்வண்ணமாகவே வேதாங்கமாகவுள்ள ஸகல சாஸ்த்ரங்களையும் மாதுல ஸகாசத்திலேயே இருபது திருநக்ஷத்ரத்திற்குள் அதிகரித்து, மந்த்ர விசேஷங்களையும் உபதேசம் பெற்று நிபுணராக விளங்கிவருகையில், ப்ராப்த காலத்திலே க்ருஹஸ்தாச்ரமத்தையும் ஸ்வீகரித்து ஆஹிதாக்நியாய் ஸ்ரீ காஞ்சியிலேயே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ர ப்ரவசனங்கள் செய்தருளா நின்றார்.

## இடையில் முக்கியமானதொரு விஜ்ஞாபனம்

அறுநூறு ஆண்டுகட்கு முன்பெழுந்தருளியிருந்த ஸ்வாமியின் சரித்திரத்தை நாம் சிறந்த ஆதாரங்கொண்டே எழுதவேண்டும். இக்காலத்தவர்கள் எழுதிய சரித்திர நூல்கள் நாலைந்து காணப்படுகின்றன. அவை பரஸ்பர விருத்தங்களென்றும் பிராமாணிகமான ஆதாரமுடையனவல்ல வென்றும் எழுபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு ஸ்ரீ காஞ்சீபுரத்தில் வாழ்ந்த ஜகத்விக்யாதரான ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் சிஷ்யர்களாலும், திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியராலும் காரண விசேஷ நிரூபணங்களுடன் எழுதி வெளியிடப்பட்டிருப்பதால் விச்வஸநீயமான சரித்திர நூல் அரிதாகவே யுள்ளது. கீழே நாம் ப்ரஸ்தாவித்த ஆசார்ய சம்புவானது மிகவுயர்ந்த நூல். இதற்கு வேதாந்தாசார்ய விஜயமென்னுந் திருநாமம் ப்ரஸித்தமானது. இது ஸம்ஸ்க்ருத நூலாதலால் இதில் ப்ரக்ஷேபசங்கைக்கு அவகாசமில்லை. அதை நாம் இளமையில் பாடமாக வாசித்திருந்தோம். அதில் நமக்கு மஹத்தான கௌரவ ப்ரதிபத்தியுண்டு. ஸ்வாமியோடு விகல்பிக்கலாம்படியான வாக் வைபவத்தையுடைய வொரு மஹாவித்வத் கவிவரேண்யரே அந்த க்ரந்தத்தை இயற்றியவர். அரசாணிபாலை வேங்கடாத்வரியின் சமபூக்ரந்தங்களிற் காட்டிலும் மிகவுயர்ந்தது அது. அதில் இதராசார்ய தூஷணமென்பது அடியோடு இடம் பெறுதலோடு ஸ்வாமிக்கு ப்ராமாணிகமாக எவ்வளவு சரித்திரமுள்ளதோ அவ்வளவே அதில் நிபந்திக்கப் பட்டுள்ளது. அதில் காவ்ய ஸரணிக் கேற்ப வர்ணனைகளாகவும் உத்ப்ரேக்ஷைகளாகவு முள்ள பாகங்களைத் தள்ளி சரித்ரபாகமாகவுள்ளதை மாத்திரம் தொகுத்தால் இங்கே நாம் காட்டுகிற அளவுதான் உண்மையான சரித்திரம் தேறுகிறது. அதை அந்யூந அநதிரிக்தமாகக் காட்டுகிறோம் காண்மின்.

## ஆசார்ய சம்புவில்காணும் ஸ்வாமியின் சரித்திரம்

அந்த சம்பூக்ரந்தத்தில் ஆறு ஸ்தபகங்கள் உள்ளன. முதல் ஸ்தபகத்தில் - விபுலமான மங்களாசரணம், வேதாந்தஸூரி சரித்ரம் சொல்லுகிறேனென்ற ப்ரதிஜ்ஞை, க்ரந்தகர்த்தாவான தம்முடைய வம்சாவளீப்ரசம்ஸை, ஸ்வாமியினுடைய அவதார ஸ்தலமான காஞ்சீபுரியின் வர்ணனை, ஸ்வாமியினுடைய பிதாமஹரான புண்டரீகாக்ஷயஜ்வாவின் வர்ணனை - ஆக இவ்வளவு உள்ளது.

இரண்டாவது ஸ்தபகத்தில் – அந்த புண்டரீகாக்ஷயஜ்வாவின் திருக்குமாரரும் ஸ்வாமியினுடைய திருத்தகப்பனருமான அநந்த ஸூரியின் ப்ரசம்ஸை; அவருடைய தேவியார் கர்ப்பவதியானது, திருமலைமால் திருமணி அந்த கர்ப்பத்திலே வந்து ஆவேசித்தது ஆக இவ்வளவு சொல்லப்பட்டது. (இனிமேல் தான் திருவவதாரம் தொடங்கி சரித்திரம் கூறுதல்.)

மூன்ருவது ஸ்தபகத்தில்— 1. ஸ்வாமியினுடைய திருவவதாரம், 2. பால்ய வர்ணனம், 3. நடாதூரம்மாள் பக்கலிலே ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம் செய்துவரும் தம்முடைய மாதுலரான கிடாம்பியப்புள்ளாரோடு கூட அம்மாள் திருமாளிகைக்குச் சென்று அங்கு அம்மாளுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றது, 4. காலத்தில் உபநயநாதிகள் நடந்து வேதாத்யயநமும் ஸாமாந்ய சாஸ்த்ராத்யயநமும் வெகு விரைவில் செய்தது, 5 விவாஹம் செய்துகொண்டது, 6. ஹயக்ரீவ மந்த்ரத்தை ஜபித்தது, 7. வாதிகளை வென்றது, 8. ந்யாய ஸித்தாஞ்ஜநம் முதலிய சில க்ரந்தங்கள் ஸாதித்தது. 9. கவிதார்க்கிக கேஸரி யென்கிற விருது பெற்றது;—ஆக இவ்வளவு சொல்லப்பட்டது.

நான்காவது ஸ்தபகத்தில் 10. தேவப் பெருமாளுடைய வைசாகோத்ஸவ ப்ரசம்ஸை 11. அவ்வுத்ஸவத்தில் கருடோத்ஸவ தினத்தில் பஹுமாணிக்கப் பெற்ற ஸ்வாமி வரதராஜ பஞ்சாசத்ஸ்தோத்ரமருளிச் செய்தது: 12. வைசாகோத்ஸவ ஸேவார்த்தமாக வந்திருந்த வித்யாரண்யயதி, ஸ்வாமியினுடைய கவிதார்க்கிக ஸிம்ஹபிருதத்தைப் பொருமல் தன்னேடு வாதத்திற் கிழுக்க, ப்ரசண்ட வாதம் நடத்தி அந்தயதியை பங்கப்படுத்தினது. 13. பிறகு புரட்டாசி மாஸம் அணித்தானவாறே திருவேங்கடமுடையானுத்ஸவம் ஸேவிக்கக் குதூஹலங் கொண்டது—ஆக இவை சொல்லிற்று.

ஐந்தாவது ஸ்தபகத்தில்—14. ஸ்வாமியினுடைய திருவேங்கட யாத்திரை. 15. திருமலையில் தயாசதக மருளிச் செய்தது. 16. முன்பு காஞ்சீபுரியில் பராஜிதராய்ப் போன வித்யாரண்யர் விஜயநகரத் தரசனிடம் சேர்ந்திருந்து, அந்த ராஜாவுக்கு இவருடைய அப்ரமேயமான வைபவத்தை யெடுத்துரைத்து இவரை அங்கே வரவழைத்து விசேஷ ஸன்மானமளிக்க ராஜாவின் அநுமதியையும் பெற்று அப்போது திருவேங்கட மலையிலே வாழ்கின்றவிவர்க்குச் செய்தி யனுப்ப, இவர் வைராக்ய பஞ்சகத்தை யெழுதி யனுப்பித் தம்முடைய அப்ரதிமமான வைராக்யத்தைக் காட்டி நின்றது. 17. பிறகு வடதிசை நோக்கிச் சென்று கங்காநதி தீர்த்த யாத்திரை செய்தருளி மீண்டு காஞ்சீபுரி வந்து சேர்ந்து சிலநாள் அவ்விடத்திலேயே வாழ்ந்த செய்தி. 18. விஜய நகரத் தரசனுடைய ஆஸ்தானத்தில் வித்யாரண்யர்க்கும் அக்ஷோப்ய முனிக்கும், த்வைதாத்வைத விவாத கோலாஹலம் நடக்க, அவ்விருவருடைய வாதங்களில் எவருடைய வாதம் ஸமீசீநமானதென்று முடிவு தெரிந்துகொள்ள விரும்பிய அரசன் இருவருடைய வாதங்களையும் எழுதச் செய்து வாங்கி ஆள் மூலமாக ஸ்வாமிக் கனுப்பி மத்தியஸ்தாபிப்ராயம் தெரிவிக்க வேணுமென்று வேண்ட, "அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யமக்ஷோப்ய முநிரச்சிநத்." என்றொரு ச்லோகமியற்றி யனுப்ப, அதை ராஜா பெற்று மிகவுகந்து அக்ஷோப்ய முநியை ச்லாகித்தா னென்பது. 19. பிறகு ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்க விரும்பிய ஸ்வாமி ஸ்ரீகாஞ்சியில் நின்றும் புறப்பட்டு வழியடைவில் திருவஹீந்திரபுரம் சென்று சேர்ந்து அங்கு நெடுங்காலம் வஸிக்கவேணுமென விரும்பி ஔஷதாத்ரியில் ஹயக்ரீவ மந்த்ர வ்ருத்தி பூர்வகமாக

ஹயக்ரீவோபாஸநை செய்து வருகையில் ஒருநாள் ஜப ஸமயத்தில் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட பகவானுடைய நியமனத்தினால் ஹயக்ரீவ ஸ்தோத்ரம், தேவநாயக பஞ்சாசத், கோபால விம்சதி, மஹாவீர கத்யம், அச்யுத சதகம், பரமதபங்கம், விரோத பரிஹாரம் முதலான க்ரந்தங்களை யியற்றினது. 20. பிறகு ஸ்ரீமுஷ்ணத்திற் கெழுந்தருளி அங்கு நின்றும் ஸ்ரீரங்காபிமுகமாக எழுந்தருளுகையில் ஸ்ரீரங்கத்தில் நின்றும் வந்து கொண்டிருந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்கு துர்வாதி விஜயார்த்தமான ஆஹ்வாந பத்ரிகையை ஸமர்ப்பிக்க, விரைந்து சென்று கோயில் சேர்ந்தா ரென்பது சொல்லிற்று.

ஆறுவது ஸ்தபகத்தில்—21. ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனை ஸேவித்து பகவத் த்யாந ஸோபாநம் முதலான ஸ்துதிக ளருளிச் செய்தது, 22. அங்குள்ள பாகவதர்களின் வேண்டு கோளுக் கிணங்கி க்ருஷ்ணமிச்ர னென்கிற துர்வாதியோடு பதினெட்டு நாள் வாதயுத்தம் செய்து வெற்றி பெற்றது, 23. வேதாந்தாசார்யரென்றும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரென்றும் விருதுகள் பெற்றது. 24. சததூஷணீ அதிகரண ஸாராவளி தத்வமுக்தா கலாபம் ஸர்வார்த்த ஸித்தி ஸேச்வர மீமாம்ஸை ஸங்கல்ப ஸூர்யோதயம் யாதவாப்யுதயம் தாத்பர்ய சந்திரிகை மீமாம்ஸா பாதுகை தத்வடீகை ஸ்ரீஸ்துதி பூஸ்துதி யதிராஜஸப்ததி முதலான பல பல நூல்களை யியற்றினது, 25. கவித்வச் செருக்குடன் வந்தவொரு துர்வாதியின் அவலேபத்தை யகற்றப் பாதுகாஸஹஸ்ரமருளிச் செய்தது, 26. ஸமஸ்யா ஸஹஸ்ர பூரணம் செய்தது, 27. அப்போது அங்கு யவகோபப்லவ முண்டாக, அது தொலைய அபீதிஸ்தவ மருளிச் செய்தது, 28. அங்கு நின்றும் புறப்பட்டுத் திருவணை யாத்திரை செய்தது, 29. ஆழ்வார் திருநகரி திருநாராயணபுரம் முதலானவை ஸேவித்துக்கொண்டு காஞ்சீபுரம் வந்து சேர்ந்தது, 30. அங்கு ஸ்வாமியினுடைய பிருதாவளிகளைப் பொறுதவொரு மாந்த்ரிகன் வந்து பாம்பாட்டப் போராட்டம் செய்ய, கருட தண்டகமருளிச் செய்து அவன் செருக்கை யடக்கினது, 31. பிறகு திருக்குமாரர் அவதரித்தது. 32. ரஹஸ்யத்ரயஸாரமியற்றியது. ஆக இவ்வளவு சொல்லி க்ரந்தம் தலைக்கட்டப்பட்டது.

மேலே விவரித்தபடி ஸ்வாமியின் சரித்திர ஸம்பந்தமாக முப்பத்திரண்டு விஷயங்களே அந்நூலிலுள்ளன. சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் பாதரக்ஷையைக் கட்டி ஸ்வாமி திருமுடியிலே படும்படி தொங்கவிட்டார்க ளென்றும், ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்த வர்கள் வஞ்சித்துவிட்டார்களென்றும், ஸந்நிதியில் பெருமாளை ஸேவித்துக் கொண்டிருக்கும் போது ஏகாதசியன்று பொங்கலைக் கொணர்ந்து கொடுத்தார்களென்றும், திருமாளிகையி லெழுந்தருளியிருந்து க்ரந்தாவலோகநம் செய்துகொண்டிருக்கையில் திருவடிகளைப் பிடித் திழுத்துத் தெருவிலே விழவிட்டார்களென்றும் இப்படி பலவாறு நவீநர்கள் எழுதியுள்ள சரித்திரங்களானவை பிறர்மீது அவத்ய மேறிடுவதற்காக நிராதாரமாகக் கல்பிக்கப்பட்டவை. இதனால் பிறர்பால் அவத்ய மேறுவது மாத்திரமன்று. ஸ்வாமிக்கும் மிகுந்த கௌரவ ஹாநி ஏற்படுகிறதென்பதை விவேகிகள் எளிதாக உணர்வர்கள். * ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:* என்றாப்போலே "வேதாந்த ஸூரிர் நிகமாந்தஸூரிஸ் த்ரய்யந்த ஸூரி: கவிதார்க்கிகேந்த்ர:, இத்யேவ ஸர்வத்ர ஸதைவ ஸர்வே ஜநாஸ் ஸமந்தாத் கதயந்த ஆஸந்" என்று ச்லோகமியற்றிக் குலாவ வேண்டியிருக்க, (அதாவது) உலகமெல்லாம் தம்மையே வாய் வெருவும்படியாகத் தமது திருக்குணங்களாலே எல்லாரையும் ஆவர்ஜநம் செய்துகொண்டு எழுந்தருளி யிருந்தாரென்று உள்ளபடி பெருமைகளை ப்ரசாரம் செய்ய

வேண்டியிருக்க, அது செய்யாதே ஸபக்ஷர்களும் விபக்ஷர்களுமான எல்லார்க்கும் வெறுக்கத் தக்கவராக இருந்து வந்தாரென்று ப்ரசாரம் செய்வதனுல் ஸ்வாமிக்கு லாகவமன்ரோ உண்டாகிறதென்பதைச் சிறிது மறியகில்லாதே, வைபவ க்ரந்தமென்று பெயரிட்டு லாகவமயமாக எழுதிவைப்பவர்களைப் பற்றி மிகவும் சோகிக்கவேண்டியது தவிர வேறுண்டோ?

ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்காக வரிக்கப்படுமவர்கள் ஆப்தபந்துக்களா யிருப்பர்களே தவிர வழிப்போக்கர்களா யிருக்க மாட்டார்களே. இதிலென்ன ஸம்சயம்? அப்படி ஆப்தபந்துக்களானவர்கள் நிமந்த்ரணத்திற்கு இசைந்திருந்து ஸமயத்தில் வாரரதே வஞ்சித்து விட்டார்களென்று கதை யெழுதினுல் இது மஹாவைபவநிதியான ஸ்வாமியின் விஷயத்திலே பொருந்துமாவென்று இதுகூட ஆராய்வாரில்லையே. அஸூயுக்களின் கலஹவார்த்தைக் கிணங்கி ஒருவர் வஞ்சித்துவிட்டாலும் மூவருமே வஞ்சித்து விட்டார்களென்று கதை யெழுதுவது வியப்பினும் வியப்பே. அப்பய தீக்ஷிதருடைய சரித்திரத்தில் காணும் கதை இது. சாஸ்த்ர கர்ஹிதமான பல காரியங்களைச் செய்து பதிதர்களென்று ஒதுக்கப்பட்டவர்கள் சிலர் செய்யும் ச்ராத்தங்களில் இப்படிப்பட்ட ஸம்பவம் விளைவது கேட்டதுண்டு, கண்டதுமுண்டு; பதித பாவநரான ஸ்வாமி திறத்திலா இப்படி ஹேயமான கதையைத் தொடுப்பது? இவர்களது கொள்கையின்படி இக்கதை உண்மையாக நடந்திருக்குமாகில்... .........மேலே என்ன சொல்லுவதென்று தோன்றவில்லை. ஸ்வாமிக்குப் பெருமையென்று நவீநர்கள் நவீநமாகக் கல்பனை செய்து எழுதும் விஷயங்கள் இவ்வளவு ஹேயமாயன்ரோ யிருக்கின்றன. எந்த ஆசார்யர்களின் திவ்யஸூக்திகளை ஸ்வாமி தலையாலே சுமந்து ஸதா ஸர்வதா அவற்றையே அநுஸந்தானம் பண்ணிக் கொண்டும் தம்முடைய க்ரந்தங்களிலும் தழுவிக் கொண்டும் போந்தாரோ அந்த ஆசார்யர்களை ப்ரதிபக்ஷிகளாகக் கொண்டிருந்தாரென்றும், அவர்களுடைய அந்த திவ்ய ஸூக்திகளைக் கண்டிப்பதே காரியமாக இருந்தாரென்றும் இப்படிப்பட்ட அபக்தங்களையே நிரப்பியன்ரோ நவீநர்கள் தேசிக வைபவமென்றும் தேசிக ப்ரபாவமென்றும் தேசிக திவ்ய சரித்ரமென்றும் எழுதி வைப்பது. பாரமார்த்திக பக்தர்கள் இந்த அபக்தங்களை யெல்லாம் வெகுதூரத்தில் விலக்கி ப்ராமாணிக ஹிருதயங்கமமான சரித்திரங்களை யுணர விரும்பவேண்டும்.

பக்தி விசேஷத்தினுல் ஆசார்யருக்கு அந்யாத்ருசமான வைபவங்களைப் பிரசுரஞ் செய்ய வேணுமென்று குதூஹலங் கொண்டு சில பல கதைகளைக் கற்பனை செயது சிலர் எழுதி வைத்திட்டால் அதை யநுஸரித்துப் பின்புள்ளவர்கள் எழுதி வந்தால் நாளடைவில் அந்த கல்பித கதைகள் மெய்யென்று நினைக்க நேர்ந்துவிடுகிறது. அந்த கல்பித கதைகளில் அநுபபத்தி ஒன்றுமில்லையாகில் பக்திமான்கள் உகந்தே யிருக்கலாம். இதர ஆசாரியர்களுக்குப் பழிப்பாய் ப்ரக்ருத ஆசார்யருக்கும் பழிப்பாய்த் தலைக்கட்டுகின்ற அக் கல்பனைக் கதைகளால் பரிஹாஸ்யதையே தேறுவதனுல் விவேகிகளா யுள்ளவர்கள் கல்பனைக் கதைகளை விலக்கியே தொலைக்கவேண்டும். இன்னின்ன கதைகள் கற்பனையென்று நாம் நெடுநாளாகவே தெரிவித்து வருவதால் பிராமாணிகர்களாயுள்ளவர்கள் இவை அசைக்கமுடியாத விமர்சங்களே யென்று உகந்து ஏற்றுக்கொள்ளுகிருர்கள். இக்காலத்து வித்வான்களில் விவேகியான ஸ்ரீ. உ. வே. உப்பிலியப்பன் ஸன்னிதி நவநீதம். ஸ்ரீராமதேசிகாசார்யரால் பரிசோதித்து ஸமீப காலத்தில் வெளியிடப்பட்ட ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தின் முகப்பில்

ஸ்ரீஸ்வாமி சரித்திரம் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளது. அதில் தலைமேல் எழுதியிருப்பதாவது "ஸ்ரீ தேசிக சரித்திரம் பல்வேறு பதிப்புகளில் வெளிவந்துள்ளது. அவற்றில் நிகழ்ச்சிமுறை நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்று இங்ஙனே உள்ளபடியெழுதி வெளியிட்டுள்ளார். "வேறுபாடு காணப்படுகிறது" என்றெழு தாமல் "வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்றெழுதியிருப்பதை நிரூபகர்கள் விமர் சிக்கவேணும். எதனால் அவர் அப்படியெழுத நேர்ந்ததென்றால், அவர் 1944 ஆம் வருஷத்தில் வெளியிட்ட தேசிகப் பிரபந்தவுரையில் ஒரு அட்வகேட் தேசிக சரித்திரமெழுது கிறவியாஜமாகப் பூருவாசாரியர்களை தூஷித்திருந்தது காரணமாகவே விவாத நூல்கள் வளரத் தொடங்கினவென்பதை நாம் பலகால் பிரசுரித்திருக்கிறோம். உண்மையில் அந்த அதர்க்கணச் செயல்தான் விவாத வளர்ச்சிக்குக் காரணம். மேலே குறித்த நவநீதம் நண்பர் இதை நன்கு தெரிந்துகொண்டதனால் உண்மையை இசைந்து கொள்வதுதான் உரியதென்று கொண்டு அங்ஙனம் எழுதினார்.

அவ்வளவேயு மன்றிக்கே, மேலே சரித்திரத்தில் பாதுகாஸஹஸ்ரமவதரித்ததைப் பற்றியெழுதுகையில் நவீநர்களின் கற்பனைக் கதைகளையும் மேலே குறிப்பிட்ட அட்வ கேட்டின் கற்பனைக் கதையையும் அறவே யொழித்து, நாம் பலகால் தெரிவித்திருந்த உண் மையைத் தழுவி உள்ளவாறெழுதியுள்ளார். அவரும் ஸங்க்ஷேபரீதியினால் சில விஷயங்களை மட்டும் பழையபடி யெழுதியிருந்தாலும் பெரும்பாலும் பிராமாணிக வழியில் சார்ந்திருப் பது உகக்கத்தக்கது.

---

நாம் வேதாந்த தேசிக வைபவமென்று தனியே விரிவாகவெழுதி அச்சிட் டிருக்கும் நூல் சென்ற சுபகிருதுஷூ பங்குனி விசாகத்தில் வெளிவந்துள்ளது. அதை பக்தர்கள் தருவித்துப்பார்ப்பது.



ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீகாஞ்சீ ஸ்தோத்ரமாலிகா

# * श्रीकाञ्चीस्तोत्रमालिका *

ஸ்ரீகாஞ்சீபுரியில் ஸேவைஸாதித்தருளும் யதோக்தகாரி, அஷ்டபுயகரத்தான், வேளுக்கையாளரி, தீபப்ரகாசர், தேவப்பெருமாள் இவ்வைவரையும்பற்றி ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் அருளிச்செய்த ஸ்தோத்ரங்கள் உரையுடன்.

உரையாசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी । वेदान्ताचार्यवर्यो मे संनिधत्तां सदा हृदि ॥

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ,
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

---

## — ஸ்ரீயதோக்தகாரிஸ்தோத்ரத்தின் அவதாரிகை —

ஸ்ரீகாஞ்சீபுரிக்கு நடுநாயக மணியாய் விளங்குபவர் ஸ்ரீயதோக்தகாரிப் பெருமாள். தமிழில் சொன்னவண்ணஞ்செய்த பெருமாளென்று வழங்கப்படுபவர். “சதுமுகனூர் வேள்விதனைச் சதிர் கெடுக்கச் செறிந்தோடுங் கதியுடைய வேகவதிக்கு அணையாக வந்துதித்தோய்!” என்கிறபடியே எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்காக அயன் புரிந்த அயமேத வேள்வியைக் கெடுக்கவெண்ணின ஸரஸ்வதியானவள் வேகவதீ ரூபத்துடனே பெரு வெள்ளங் கோத்துப் பெருக, யாகத்தில் ஸ்வாஹாகாரம் அடங்கி ஹாஹாகாரம் அபிவிருத்தி யடைந்தவளவிலே “இவ்விடையூறு தனை நீக்கியருளவேணும்” என்று அந்த நான்முகன் பிரார்த்திக்க, அவனது வேண்டுகோளின்படி அணையாக வந்துதித்து இடையூறு நீக்கியருளின காரணத்தினால் “யதோக்தகாரீ” என்று திருநாமமாயிற்று இப்பெருமானுக்கு.

அன்றியும், திருமழிசையாழ்வார் கணிகண்ணனென்னும் அந்தேவாஸியுடன் இத்தலத்தி லெழுந்தருளியிருந்த காலத்துப் பல்லவராஜனுடைய கொடுங்கோன்மையினால் அக்கணிகண்ணனும் ஆழ்வாரும் வெளியேற நேர்ந்தபோது “கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா! நீ கிடக்கவேண்டா......நீயுமுன்றன் பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்” என்று முன்பும், “கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி மணிவண்ணா நீ கிடக்கவேண்டும்..........நீயுமுன்றன் பைந்நாகப் பாய் விரித்துக் கொள்” என்று பின்பும் ஆழ்வார் பிரார்த்தித்தபடியே பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு புறப்பட்டெழுந்தருளினதையும் மீண்டுவந்து சாய்ந்தருளினதையும் பற்றி யதோக்தகாரி யென்று திருநாமமாயிற்றென்னவுமாம்.

வேதாந்ததேசிகன் தம்முடைய விபவகாலத்தில் நாடோறும் இப்பெருமாளை மங்களாசாஸனம் செய்யும்போது அநுஸந்தித்த ச்லோகங்களே யதோக்தகாரி ஸ்தோத்ரமென்பது. பக்தர்களின் வேண்டுகோளினால் அவர்களுக்கு இயற்றித் தந்ததென்னவுமாம்.

அவதாரிகை முற்றிற்று.

---

## ※ ( यथोक्तकारिस्तोत्रम् ) ॥ वेगासेतुस्तोत्रम् ॥ ※

एकं वेगवतीमध्ये हस्तिशैले च दृश्यते । उपायफलभावेन स्वयंव्यक्तं परं महः ॥ १

ஏகம் வேகவதீமத்யே ஹஸ்திசைலே ச த்ருச்யதே
உபாயபலபாவேந ஸ்வயம்வ்யக்தம் பரம் மஹ:. (1)

ஸ்வயம் வ்யக்தம் பரம் ஏகம் மஹ: வேகவதீ மத்யே ஹஸ்திசைலே ச உபாயபலபாவேந த்ருச்யதே } ஸ்வயம் வ்யக்தமாய்ச் சிறந்ததான ஒரு தேஜஸ்ஸே வேகவதியாற்றினிடையிலும் திருவத்திமாமலையிலும் உபாயமாகவும் உபேயமாகவும் காட்சி தருகின்றது.

* * * உலகில் அடையப்படும் பொருள் உபேயமென்றும், அடைவிக்கும் பொருள் உபாயமென்றும் வழங்கப்படும். உபேயமென்பதும் ப்ராப்யமென்பதும் பலன் என்பதும் பரியாயம் ; ஸாதனமென்பதும் உபாயமென்பதும் ப்ராபகமென்பதும் பரியாயம். உபாயம் வேறாயும், உபேயம் வேறாயும் இருப்பது உலகிற்காணுமியல்பு. எம்பெருமான் விஷயத்தில் இது மாறுபட்டிருக்கும். அவனை உபேயமாகக் கொண்டவர்கள் அவனையே உபாயமாகவும் கொள்வர். "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் நது குணௌ" என்றருளிச்செய்தார் பட்டர். கர்மஜ்ஞான பக்த்யாதிகள் உபாயமென்று கொள்ளத்தக்கவையாயிருந்தாலும் அவை அஜ்ஞர்க்கு உபாயமாய் ஜ்ஞானிகளுக்கு அபாயமாயிருக்குமவை யாகையாலே *பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்* என்கிறபடியே அவை ஹேயமாகி உபேயனான எம்பெருமான் தானே உபாய பூதனாயும் நிற்பன் பரமைகாந்திகளுக்கு. தேவப்பெருமாளாகிற ஒரு திருக்கோலமே உபாயமாயும் உபேயமாயு மிருக்கச் செய்தேயும ஒரு திருக்கோலத்தாலே உபாய பாவத்தையும் மற்றொரு திருக்கோலத்தாலே உபேயபாவத்தையும் காட்டுவோமென்று திருவுள்ளம்பற்றி வேகவதியினிடையே யதோக்தகாரியாகத் திருவவதரித்து உபாயபாவத்தைக் காட்டியும், திருவத்திமாமலையிலே தேவப் பெருமாளாகத் திருவவதரித்து உபேயபாவத்தைக் காட்டியும் ஸேவை ஸாதிப்பதாகச் சொல்லுகிறவிது சமத்காராதிசயம் பொலிந்த சாடூக்தி. உபாயோபேயத்வங்களிரண்டும் இரண்டு திருக்கோலங்களிலும் குறையற்றதே. ஆயினும் இங்ஙனே நியமித்துச் சொன்னது கதைக்குச் சேரும். (1)

ईष्टे गमयितुं पारमेष सेतुरभङ्गुरः । यत्र सारस्वतं स्रोतो विश्राम्यति विशृङ्खलम् ॥

ஈஷ்டே கமயிதும் பாரம் ஏஷ ஸேதுரபங்குர:
யத்ர ஸாரஸ்வதம் ஸ்ரோதோ விச்ராம்யதி விச்ருங்கலம். (2)

யத்ர ஸாரஸ்வதம் ஸ்ரோத: விச்ருங்கலம் விச்ராம்யதி; அபங்குர: ஏஷ: ஸேது: பாரம் கமயிதும் ஈஷ்டே } (வேகவதி ஸேதுவான) எந்த பகவானிடத்தில் ஸகல வாக்ப்ரபஞ்சமும் தட்டின்றி விச்ரமிக்கின்றதோ (2) தடங்கலின்றிப் பெருகின ஸரஸ்வதீ ப்ரவாஹமானது எந்த ஸேதுவில் ஓய்ந்து விட்டதோ, பங்கமற்றதான இந்தத் திருவணையானது (நம்மைக்) கரையேற்ற வல்லது.

* * * இந்த ச்லோகம் சிலேடையாக [ச்லேஷாலங்காரமயமாய்] அருளிச் செய்யப்படுகிறது. ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமானுக்கு வடமொழியில் வேகாஸேது வென்றும், தென்மொழியில் வெஃகணை யென்றும் திருநாமம், வெஃகணை யென்பதே வெஃகாவென்று தொக்கிநிற்கிற தென்பர், வேகாஸேது வென்கிற திருநாமத்தை நினைக்கும்போதே *அம்ருதஸ்யைஷ ஸேது:* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்கள் நினைவுக்கு வரும்

வேதாந்தங்களில் ஸேதுவாக ஓதப்பட்டுள்ள எம்பெருமான் இங்கு ப்ரத்யக்ஷ ஸேதுவாக ஸேவைஸாதித்திருக்கின்றானென்று அநுஸந்திக்க ப்ராப்தம். வேதாந்தவ்யபதிஷ்ட ஸேதுவான பகவானிடத்திலே [ஸாரஸ்வதம் ஸ்ரோத: விச்ருங்கலம் விச்ராமயதி] ஸரஸ்வதீ ப்ரவாஹமானது விச்ருங்கலமாக விச்ரமிக்கும்; ஸகலவாக்ப்ரபஞ்சமும் பகவானிடத்திலே முக்க்ய வ்ருத்த்யா பர்யவஸித்து நிற்குமென்கை. இந்த வேகாஸேதுபகவான் பக்கலிலோ வென்னில், விச்ருங்கலமாகப் பெருகியோடிவந்த ஸரஸ்வதீ நதியின் வெள்ளம் தடைபட்டொழிந்ததென்கை. [அபங்குர ஏஷ ஸேது:] உலகில் நதிகளுக்குக் கட்டும் அணைகள் என்றேனுமொருநாள் பங்கமடையக் கூடியவைகளேயாம். இந்த பகவத்ஸேது அத்தகைத்தன்று. "ஏஷ ஸேது:" என்கிற நிர்தேசம் உபநிஷத்வாக்யத்திற்கு ஸ்மாரகமாகும். [பாரம் கமயிதும் ஈஷ்டே] ஸம்ஸாராத் உத்தரிப்பிக்க வல்லதென்கை. ... ... (2)

जयति जगदेकसेतुर्वेगवतीमध्यलक्षितो देवः ।
प्रशमयति यः प्रजानां प्रथितान्संसारजलधिकल्लोलान् ॥ ३

ஜயதி ஜகதேகஸேதுர் வேகவதீமத்யலக்ஷிதோ தேவ:
ப்ரசமயதி ய: ப்ரஜாநாம் ப்ரதிதாந் ஸம்ஸார ஜலதிகல்லோலாந். (3)

| | |
|---|---|
| ய: ப்ரஜாநாம் ப்ரதிதாந் ஸம்ஸா ஜலதி கல்லோலாந் ப்ரசமயதி, ஜகத் ஏகஸேது: (ஸ:) தேவ: வேகவதி மத்ய லக்ஷித: ஜயதி. | எந்த பகவான் ஜனங்களினுடைய ஸுப்ரஸித்தங்களான ஸம்ஸார ஸாகரத்தின் அலைகளை யொழிக்கின்றானோ, ஸகல ஜகத்துக்கும் ஒரே ஸேதுவான அப்பெருமான் வேகவதியினிடையில் காணப்படுபவனாய் விளங்காநின்றான். |

* * * உலகத்தில் நதிகளுக்குக் கட்டப்படும் ஸேதுவானது அலையெறிந்து ஓடும் நீர்ப் பெருக்கைத் தடுத்து நிற்கும். கடலலைகளைத் தடுக்கும்படியான ஸேது உலகில் கட்டப்படுவதில்லை. வேகாஸேதுவென்னும் இந்த பகவத் ஸேதுவானது அத்யந்த விலக்ஷணமாயமைந்தது. வேகவதீ நதியினிடையிலே காணப்படுவது ஒருவிசேஷம். அதற்குமேலே கடலலைகளையும் தடுத்து நிற்பது மற்றொரு விசேஷம். இங்கே கடல் ஏது? என்னில்; [ப்ரஜாநாம் ஸம்ஸார ஜலதி கல்லோலாந்] * ஸம்ஸாரஸாகரம் கோரம் * என்றும் * பிறவிக் கடலுள் நின்று நான் துளங்க * என்றும் சொல்லுகிறபடியே நாம் துளங்குகிற ஸம்ஸார ஸாகரத்தின் அலைகளுண்டு தாபத்ரயாத்மகங்களான பலவகைப்பட்ட க்லேசங்கள்; அவை எப்படிப்பட்டவையென்னில்; [ப்ரதிதாந்] ஸுப்ரஸித்தங்களென்று ஒரு பொருள்; பெருப்பெருத்தவையென்று மற்றொரு பொருள். ஆக இவற்றை ப்ரசமநம் செய்துகொண்டு விளங்குகின்றாரென்றதாயிற்று. .... ... .... ... (3)

चतुराननसप्ततन्तुगोप्ता सरितं वेगवतीमसौ निरुन्धन् ।
परिपुष्यति मङ्गलानि पुंसां भगवान् भक्तिमतां यथोक्तकारी ॥ ४

சதுராநநஸப்ததந்துகோப்தா ஸரிதம் வேகவதீமஸௌ நிருந்தந்,
பரிபுஷ்யதி மங்களாநி பும்ஸாம் பகவாந் பக்திமதாம் யதோக்தகாரீ. (4)

| | |
|---|---|
| வேகவதீம் ஸரிதம் நிருந்தந் சதுராநந ஸப்ததந்து கோப்தா அஸௌ யதோக்தகாரீ பகவாந் பக்திமதாம் பும்ஸாம் மங்களாநி பரிபுஷ்யதி. | வேகவதி நதியைத் தடை செய்துகொண்டு பிரமன் வேள்வியைக் காத்தருளின இந்த யதோக்தகாரி யெம்பெருமான் பக்திமான்களான மனிதர்களுக்கு மங்களங்களைப் போஷிக்கின்றார். |

திருமாலைக் காணவேண்டித் தவங்கள் புரிந்தனன்.

* * * முன்பு, நான்முகக் கடவுள் திருமாலைக் காணவேண்டித் தவங்கள் புரிந்தனன். ஆயினும் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் நிலைகொள்ளாமல் வெவ்வேறு விஷய இன்பங்களில் பதறியோடுகின்ற தனது நெஞ்சை அடக்கியாள முடியாமல் வருத்தங்கொண்டு இன்னது செய்வதென்று தெளியப்பெறுமல் திகைத்திருக்கு மளவில் ஆகாயத்தில் நின்றும் ஒரு அசரீரி வாக்குத் தோன்றியது; அதாவது :— 'பிரம! ஆயிரம் அச்வமேதங்களை அனுட்டித்தால்தான் சித்தசுத்தி பெற்றுத் திருமாலைக் கட்கூடாகக் காணப்பெறுவாய்; விரைவில் திருமாலைக் காணவேண்டி ஆயிரம் அச்வமேதயாகமனுட்டிக்கும் தாமதத்தைப் பொறுக்ககில்லாயாகில், தொண்டை நாட்டிலுள்ள ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திற்குச் சென்று அவ்விடத்தில் அயமேத வேள்வியியற்றி எம்பெருமானை உகப்பிப்பாயாக: அங்கு ஒரு கருமம் செய்தாலும் அஃது ஆயிரமுகமாகிப் பயன் பெறுவிக்கும்; இஃது அந்த க்ஷேத்ரத்திற்கு உற்ற பெருமை' என்று. அதுகேட்டுப் பரமானந்தமடைந்த பிரமன் மேருமலையுச்சியில் நின்று உடனே எழுந்து ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்து அங்குத் தவமுனிவர் சூழ்ந்த திருவனந்த ஸரஸ்ஸையும் அதனருகில் திகழும் திருவத்தி மாமலையையும் நோக்கியுவந்து அத்திருக்குளக்கரையிலேயே தூயவேள்வி புரியத் துணிந்து ஸகல ஸன்னாஹங்களும் செய்தவளவிலே, புரோஹிதரான ப்ருஹஸ்பதியானவர் 'திசை முகனே! உனது தருமபத்தினியான ஸரஸ்வதியின்றி வேள்வியை நடத்த இயலாதாதலால் அவளை வரவழைக்கவேணும்' என்று சொல்ல, பிரபலமானவொரு மனவருத்தத்தினால் நெடுநாளாகப் பிரிந்திருக்கின்ற அவளை எவ்விதமான உபாயத்தினாலும் வரவழைக்க முடியாமற்போக, அவளை உபேக்ஷித்து ஸாவித்ரீ முதலிய மற்றை மனைவியரை உடன்கொண்டு வேள்வியைத் தொடங்கினவளவிலே, அசுரர்களின் துர்ப்போதனையினால் மிக்க சீற்றங்கொண்ட ஸரஸ்வதி கணவனது வேள்வியைக் கெடுக்க முயன்று வேகவதியென்னும் நதியாகப் பெருகி மிகவும் பயங்கரமான விசையுடனே ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர, யாகசாலையிலுள்ளாரனைவரும் அப்பெருவெள்ளத்தைக் கண்டு திடுக்கிட்டு நிற்க, பிரமன் தனது யோக த்ருஷ்டியினாலே 'அசுரர்களால் கலக்குண்ட ஸரஸ்வதியின் செயல் இது' என்றுணர்ந்து உள்ளெலாமுருகிக் குரல்தழுத்து உடம்பெலாம் கண்ணீர் சோர நின்று பகவானை வாயாரத் துதிக்க, "அணியாக வேகவதி அலையோடு கொண்டோடியாலிக்க அணையாக் கிடந்த பெருமாள்" என்று பின்னானோர் போற்றுமாறு அந்த வெள்ளத்தைத் தடை செய்யவல்ல அணையாகப் பள்ளிகொள்ள, அந்த சயனத் திருக்கோலத்தைக் கண்ட ஸரஸ்வதி நாணமுற்று மேலே பெருகிச் செல்லமாட்டாமல் திகைத்துநின்று அந்தர்வாஹினியாய்ச் சென்று கடல் சேரலுற்றாளென்னு மிதிஹாஸம் இங்கு உணரத்தக்கது.

யாகத்திற்கு ஸப்ததந்துவென்று பெயர். ... ... ... (4)

**विभातु मे चेतसि विष्णुसेतुर्वेगापगावेगविघातहेतुः ।**
**अम्भोजयोनेर्यदुपज्ञमासीदभङ्गरक्षा हयमेधदीक्षा ॥** ௫

விபாது மே சேதஸி விஷ்ணுஸேது: வேகாபகாவேகவிகாத ஹேது:.
அம்போஜயோனேர் யதுபஜ்ஞமாஸீத் அபங்கரக்ஷா ஹயமேததீக்ஷா. (5)

அம்போஜயோநே: ஹயமேததீக்ஷா யதுபஜ்ஞம் அபங்கரக்ஷா ஆஸீத், வேகாபகா வேகவிகாத ஹேது: ஸ: விஷ்ணுஸேது: மே சேதஸி விபாது. — தாமரை மலரில் தோன்றிய பிரமனுடைய அச்வமேதயாக தீக்ஷையானது எந்தப் பெருமான் மூலமாக நிறைவேறியதோ, வேகவதியின் வேகத்தைத் தொலைப்பதற்கு ஹேதுவான அந்த வேகாஸேது பகவான் எனது நெஞ்சினுள் விளங்குக.

* * * ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் திருவ்வதாரம் செய்தருளாவிடில் பிரமனுடைய அச்வமேதயாக தீக்ஷையானது சிதில்மாகியே யொழியுமன்றே. அங்ஙனம் சிதிலமாகாதபடி வேகவதியின் வேகத்தைக் கெடுக்க அணையாகத் தோன்றின வேகா ஸேது பகவான் எப்போதும் எனது சிந்தை தன்னுள் நீங்காதிருக்கவேணு மென்றாராயிற்று. (5)

श्रीमान्पितामहवधूपरिचर्यमाणः शेते भुजङ्गशयने स महाभुजङ्गः ।
प्रत्यादिशन्ति भवसंचरणं प्रजानां भक्तानुगन्तुरिह यस्य गतागतानि ॥ ६

ஸ்ரீமாந் பிதாமஹவதூபரிசர்யமாண : சேதே புஜங்கசயநே ஸ மஹாபுஜங்க :
ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி. (5)

| | |
|---|---|
| பக்த அநுகந்து: யஸ்ய கதாகதாநி இஹ ப்ராஜாநாம் பவ ஸஞ்சரணம் ப்ரத்யாதிசந்தி ஸ: மஹாபுஜங்க: புஜங்க சயநே சேதே, | திருமழிசையாழ்வாராகிற பரமபக்தசிகாமணியைப் பின் சென்றவரான எந்த பெருமாளுடைய போவதும் வருவதுமான செயல்கள் (சிந்திக்கப்பட்டவளவில்) அஸ்மதாதிகளின் ஸம்ஸாரகாந்தார ஸஞ்சரணத்தைத் தவிர்க்கின்றனவோ, கோபீவிடனான அந்தத்திருமால் ஸரஸ்வதியினால் வழிபாடு செய்யப்பெற்று சேஷசயனத்திலே பள்ளிகொண்டருளா நின்றார். |

* * * [பிதாமஹவதூபரிசர்யமாண:] பிதாமஹன்—பிரமன்; அவனுடைய வது-ஸரஸ்வதி; அவளால் வழிபாடு செய்யப்படுகிற பெருமாளென்றபடி. எம்பெருமானது தென்புறமாகச் செல்லலுற்ற வேகவதியை வஸிஷ்டர் முதலிய முனிவர்கள் பிரமனது சொற்படி வந்து வணங்கி, தாயே! ஸரஸ்வதியே! யாகசாலையில் இனியாகிலும் வந்து சேர்ந்து நாதரோடு கூடிக் களித்திருந்து இப் பெருவேள்வியை நிறைவேற்றி யருளவேணும்; எல்லா நதிகளிற்காட்டிலும் உன்றனக்கே மிக்க சிறப்பு உள்ளதாக நான்முகக்கடவுள் அநுக்ரஹம் செய்கிறார்" என்று சொல்லி வேண்டிக்கொள்ள, அவளும் மிக்க மன மகிழ்ச்சியுடனே நதியில் நின்றும் விரைந்தெழுந்து நான்முகக் கடவுளோடு சேரலுற்று இற்றைக்கும் எம்பெருமானுக்கு வழிபாடு செய்துகொண்டிருக்கும் நிலை அர்ச்சாவதாரத்திலே அநுஸாவ்யம்.

[ஸ மஹாபுஜங்க: புஜங்கசயநே சேதே] ஒரு பெரிய அரவம் அரவத்தின்மேலே பள்ளிகொண்டிரா நின்றதென்று சாடுக்தி. புஜங்கமென்னும் வடசொல் ஸர்ப்பத்திற்கும் ஜாரனுக்கும் பெயர். கோபீஜாரனென்றும் வல்லவீவிடனென்றும் பெயர்பெற்றவனிறே எம்பெருமான். நம்மாழ்வார் பிரதமப் பிரபந்தமான திருவிருத்தத்தில் இத்தலத்தை "கண்ணன் வெஃகா" என்று பாடியதனால் அதற்குச்சேர ஸ்ரீக்ருஷ்ணனை நினைத்து மஹாபுஜங்க : என்றாராயிற்று.

இனி உத்தரார்த்தத்தில் திருமழிசைப்பிரானுடைய இதிஹாஸத்தை அநுஸந்திக்கிறார். அது, கீழ் அவதாரிகையிலே உரைக்கப்பட்டுள்ளது காண்க. திருமழிசைப்பிரானுக்காக இப்பெருமான் போவதும் வருவதுமா யிருந்தானென்கிற சரிதையை அநுஸந்தித்தவாறே அஸ்மதாதிகளின் ஸம்ஸாரகாந்தார கதாகதங்கள் தொலையுமென்கிறார். யாதவாப்யுதயத்திலே "பத்தம் ததா ஸாவயதாம் முகுந்தம் அயத்நவிச்சேதிநி கர்மபந்தே" என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு ஒருவாறு நினைக்கத்தகும். வெண்ணெய் களவுகண்ட கண்ணபிரான் உரலிலே கட்டுண்டு கிடந்தானென்று சிந்தனை செய்தவாறே நம்முடைய கருமபந்தங்களெல்லாம் கட்டவிழ்ந்து தொலையுமென்றது போல. ... .... ... (6)

2

प्रशमितहयमेधव्यापदं पद्मयोनेः श्रितजनपरतन्त्रं शेषभोगे शयानम् ।
शरणमुपगतास्स्मः शान्तनिश्शेषदोषं शतमखमणिसेतुं शाश्वतं वेगवत्याः ॥ ௭

ப்ரசமிதஹயமேதவ்யாபதம் பத்மயோநே: ச்ரிதஜநபரதந்த்ரம் சேஷபோகே சயாநம்.
சரணமுபகதால் ஸ்ம: சாந்தநிச்சேஷ தோஷம் சதமகமணிஸேதும் சாச்வதம் வேகவத்யா:

பத்மயோனே: ப்ரசமிதஹயமேதவ்யாபதம் ச்ரித ஜநபரதந்த்ரம் சேஷபோகே சயாநம் வேக வத்யா: சாச்வதம் சதமகமணி ஸேதும் சாந்த நிச்சேஷதோஷம் (யதா தா) சரணம் உபகதா: ஸ்ம: } பிரமனுடைய அச்வமேதயாக விக்னத்தைப் போக்கினவரும் பக்த பராதீனரும் அரவணைமேல் பள்ளிகொள்பவரும் வேகவதிக்கு சாச்வதமான நீலமணி ஸேதுவுமான பெருமாளை ஸகல தோஷங் களும் கெடத் தஞ்சமாகப் பற்றினோம்,

* * *—'பத்மயோநே:' என்னும் பதம் (ஹயமேத) என்ற ஏகதேசத்திலே அந்வயிப்ப தானாலும் ஏகதேசாந்வயதோஷ துஷ்டமாகாது. அபேத ஸம்பந்தேந அந்வயஸ்தலத்தில் தான் அது தோஷாவஹமாகும். இங்கு ஷஷ்டி ஸம்பந்தேநைவ அந்வய:. [ச்ரிதஜந பரதந்த்ரம்] இந்த விசேஷணம் "அர்ச்சக பராதீநாகிலாத்மஸ்திதி:" என்று புகழப்பட்ட அர்ச்சாஸமாதி பத்திற்கு ஒக்குமாயினும் திருமழிசைப்பிரானுடைய ஐதிஹ்யத்தினால் இத்தலத்தெம்பெருமா னுக்குச் சிறப்பாகும். "சாந்த நிச்சேஷ தோஷம்" என்பதை எம்பெருமானுக்கு விசேஷண மாகக் கொள்வதிற்காட்டிலும் க்ரியா விசேஷணமாகக் கொள்வதே மிகப்பொருந்தும். "தரணி யில் மன்னியயனார் தனித்தவம் காத்தபிரான்" என்ற பாசுரத்தில் "திரணர கெண்ணிய சித் திரகுத்தன் தெரித்துவைத்த சுருணையிலேறிய சூழ்வினை முற்றும் துறந்தனமே" என்றதற்கு மிகவிணங்கும். [சாச்வதம் சதகமணி ஸேதும்] கற்களாலே கட்டப்பட்டு நாளடைவிலே சிதைந்தொழியும் அணையன்றிது- என்று வ்யாவ்ருத்தி காட்டினபடி. .... (7)

शरणमुपगतानां सोऽयमादेशकारी शमयति परितापं संमुखः सर्वजन्तोः ।
शतगुणपरिणामः संनिधौ यस्य नित्यं वरवितरणभूमा वारणाद्रीश्वरस्य ॥ ௮

சரணமுபகதாநாம் ஸோயமாதேசகாரீ சமயதி பரிதாபம் ஸம்முகஸ் ஸர்வஜந்தோ:
சதகுணபரிணாம: ஸந்நிதௌ யஸ்ய நித்யம் வரவிதரணபூமா வாரணாத்ரீச்வரஸ்ய.

யஸ்ய ஸந்நிதௌ வாரணாத்ரீச்வரஸ்ய வர விதரண பூமா நித்யம் சதகுண பரிணா ம: ஸோயம் சரணமுபகதாநாம் ஆதே சகாரீ ஸர்வஜந்தோ: ஸம்முகஸ்ஸந் பரிதாபம் சமயதி } யாவரொரு யதோக்தகாரிப் பெருமாளுடைய ஸாமீப்யத்தில் தேவப்பெரு மாளுடைய வரமளிக்கும் பெருமையானது நிச்சலும் நூறுமடங்காகப் பெருகுகின்றதோ, அந்த சரணாகதயதோக்தகாரியானவர் ஸர்வப்பிராணி களுக்கும் எளியராய்க்கொண்டு ஸகல தாப ஹரராயிருக்கின்றார்:

***—ஸ்ரீஹஸ்தி சைலசிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான தேவப்பெருமாளுக்கு வரந் தரும் பெருமாளென்கிற திருநாமமும் அத்திருநாமத்திற்கீடான வரமளிக்கும் பெருமையும் யதோக்தகாரி யெம்பெருமானுடைய ஸந்நிதான விசேஷத்தினால்தான் வாய்த்ததென்று ஸ்வா நுபவத்தைக் கொண்டு அருளிச்செய்கிறாரிதில். இவர் முன்னே திருவவதரித்தருளாவிடில் தேவப்பெருமாள் அவதரிக்கவே ப்ரஸக்தி யில்லையாகுமென்பது தத்துவமாதலால் இவ்வுண் மையை வெளியிட்டவாறு. ... ... ... (8)

काञ्चीभाग्यं कमलनिलयाचेतसोऽभीष्टसिद्धिः कल्याणानां निधिरविकलः कोऽपि कारुण्यराशिः ।
पुण्यानां नः परिणतिरसौ भूषयन्भोगिशय्यां वेगासेतुर्जयति विपुलो विश्वरक्षैकहेतुः ॥ ௯

காஞ்சீபாக்யம் கமலநிலயாசேதஸோபீஷ்டஸித்தி:
கல்யாணாநாம் நிதிரவிகல: கோபி காருண்யராசி:
புண்யாநாம் ந: பரிணதிரஸௌ பூஷயந் போகிசய்யாம்
வேகாஸேதுர் ஜயதி விபுலோ விச்வரக்ஷைகஹேது:. (9)

காஞ்சீபாக்யம் கமலநிலயாசேதஸ: அபீஷ்டஸித்தி: கல்யாணாநாம் அவிகலநிதி: கோபி காருண்யராசி: ந: புண்யாநாம் பரிணதி: விச்வரக்ஷைகஹேது: விபுல: வேகாஸேது:போகிசய்யாம் பூஷயந் ஜயதி — திருக்கச்சிமா நகரின் பாக்யமே வடிவெடுத்தவரும், கோமளவல்லித் தாயாருடைய திருவுள்ளத்தைப் பூர்த்திசெய்பவரும், மங்களங்களுக்கு அக்ஷய்ய நிதியா யிருப்பவரும், நமது புண்ணியங்கள் பலிக்க நின்றவரும், ஸகல ஜகத்ரக்ஷகருமான மிகப்பெரிய வேகாஸேதுபகவான் அரவணையை அலங்கரித்து வெற்றியுடன் வாழ்கின்றார்.

***—இந்தச்லோகத்தில் (காபி காருண்ய ஸீமா) என்றும் (விச்வபோகைக ஹேது:) என்றும் பாடபேதங்களுண்டு. முந்துற முன்னம் இவர் திருவவதரித்ததனாலேயே மற்றுள்ள எம்பெருமான்கள் அவதரிக்க ப்ராப்தமானபடியாலே [காஞ்சீபாக்யம்] என்றது மிகப் பொருத்தமானது. .... ... .... ... (9)

वेगासेतोरिदं स्तोत्रं वेङ्कटेशेन निर्मितम्। ये पठन्ति जनास्तेषां यथोक्तं कुरुते हरिः॥ १०

வேகாஸேதோரிதம் ஸ்தோத்ரம் வேங்கடேசேந நிர்மிதம்.
யே படந்தி ஜநாஸ் தேஷாம் யதோக்தம் குருதே ஹரி:.

॥ इति श्रीकवितार्किकसिंह सर्वतन्त्रस्वतन्त्र वेदान्दाचार्यकृतिषु वेगासेतुस्तोत्रं समाप्तम् ॥

வேங்கடேசேந நிர்மிதம் இதம் வேகாஸேதோ:ஸ்தோத்ரம் யே ஜநா: படந்தி தேஷாம் ஹரி: யதோக்தம் குருதே. — ஸ்ரீமத் வேங்கடநாதார்யர் இயற்றிய இந்த வேகாஸேது ஸ்துதியை ஓதவல்ல ஜனங்களுக்கு எம்பெருமான் மெய்யே யதோக்தகாரியா யிருப்பன்.

***—யதோக்தகாரியென்றும் சொன்ன வண்ணம் செய்த பெருமாளென்றும் ஓலைப்புறத்திலே கேட்டுப் போகையேயன்று; இந்த ஸ்துதியை ஓதுமவர்கள் ஸ்வாநுபவத்திலே காணலா மதனையென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. ... (10)

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே.
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:.

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய
**ஸ்ரீயதோக்தகாரி ஸ்தோத்ரவுரை**
முற்றிற்று.

---

ஸ்ரீமதே ஹயக்ரீவாய நம:

ஸ்ரீமதே வேதாந்த மஹாகுரவே நம:

## ஸ்ரீ காஞ்சி ஸ்தோத்ரமாலிகையில்

# அஷ்டபுஜாஷ்டகம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய உரையுடன் கூடியது.

ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

## — அவதாரிகை —

கீழே துதித்த ஸ்ரீயதோக்தகாரியின் ஸந்நிதிக்குத் தென்புறத்திலே திகழ்வது அஷ்டபுஜ திவ்ய தேசம். இத்தலத்தெம்பெருமானை ஓர் அஷ்டகமிட்டுத் துதிக்கிறாராசிரியர். இத்தலத்தி லீடுபட்ட பேயாழ்வார் * தொட்ட படை யெட்டுந் தோலாத வென்றியான் அட்டபுயகரத்தான் அந்நான்று—குட்டத்துக், கோள்முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான், தாள்முதலே நங்கட்குச் சார்வு. * என்று இப்பெருமானை ஸ்ரீ கஜேந்த்ர ரக்ஷகனாக அநுஸந்தித்துப் பேசுகையாலே அவ்வபதாநத்தையே இந்த ஸ்துதிக்கு உயிராகவைத்து "கஜேந்த்ர ரக்ஷாத்வரிதம்" என்று உபக்ரமித்தருளுகிறார்.

அஷ்டபுஜன் என்பது எம்பெருமானுடைய திருநாமம். ஆழ்வார்கள் தலத்தின் பெயரைச் சொல்லியே மங்களாசாஸனம் செய்தருள்வது வழக்கமாதலால் திவ்யதேசத்திற்கு அட்டபுயகரம் என்று திருநாம மாக்கினர். க்ருஹம் என்கிற சொல் கரமெனத் திரிந்தது; அஷ்டபுஜக்ருஹம் என்றதாயிற்று. 'அட்டபுயவ்கரம்' என்பது அட்டப்புயகர மாயிற்றென் பாருமுளர். அஷ்டபுஜப்பெருமா ளெழுந்தருளியிருக்கும் தலம் என்றதாயிற்று. ஆசிரியர் தாமும் இந்தத் திருவுள்ளங்கொண்டே இந்த ஸ்தோத்திரத்தில் இரண்டாம் ச்லோகத்தில் "அஷ்டபுஜாஸ்பதேச" என்றருளிச் செய்தார். "அஷ்டபுஜாகிலேச" என்கிற பாடாந்தரம் ஸாதுவன்று. 'அஷ்டபுஜாஸ்பதம்' என்று திவ்யதேசத்தின் திருநாமமாய் அதற்கு ஈசனே! என்றபடி. அந்த ச்லோகத்தினுரையில் விரிவு காண்க. ... ... *

## * अष्टभुजाष्टकम् *

गजेन्द्ररक्षात्वरितं भवन्तं ग्राहैरिवाहं विषयैर्विकृष्टः ।
अपारविज्ञानदयानुभावमाप्तं सतामष्टभुजं प्रपद्ये ॥ १

கஜேந்த்ர ரக்ஷாத்வரிதம் பவந்தம் க்ராஹைரிவாஹம் விஷயைர் விக்ருஷ்ட:
அபாரவிஜ்ஞாந தயாநுபாவம் ஆப்தம் ஸதாம் அஷ்டபுஜம் ப்ரபத்யே.

(ஹே பகவந்!) க்ராஹைரிவ (ஸ்திதை:) விஷயை: விக்ருஷ்ட: அஹம் கஜேந்த்ர ரக்ஷாத்வரிதம் அபார விஜ்ஞாநதயா அநுபாவம் ஸதாம் ஆப்தம் அஷ்டபுஜம் பகவந்தம் சரணம் ப்ரபத்யே.

எம்பெருமானே! முதலைகள் போன்றுள்ள விஷயங்களினாலே இழுக்கப்பட்ட நான், கஜேந்திராழ்வானைக் காத்தருள்வதில் பதற்றமுடையவனாய், அளவற்ற ஞானமும் தயையும் சக்தியுமுடையவனாய் நல்லார்களுக்கு விச்வஸநீயனாய் அஷ்டபுஜனான வுன்னைத் தஞ்சமாகப் பற்றுகின்றேன்.

* * *—இந்தச்லோகத்தில் ஒரு ஸம்புத்தியை வருவித்துக்கொள்ள வேணும்; பவந்தம் என்றிருப்பது விளியில்லாமல் பொருந்தாதாகையாலே மேல்ச்லோகமே இந்த ஸ்தோத்ராரம்பமென்றும், இந்த ச்லோகம் புராதனமாயிருந்ததை அநுஸந்தித்தபடியென்றும் சில பெரியார் சொல்லக்கேட்டிருந்ததுண்டு. எம்பெருமானே! ஒரு முதலையினு லடர்ப்புண்ட யானையைக் காத்தருள்வதற்கு அரைகுலையத் தலைகுலையப் பதறியோடிவந்த தேவரீர் பஞ்ச விஷயங்களென்னும் ஐந்து முதலைகளாலே அடர்ப்புண்ட அடியேனைக் காத்தருளப் பதற வேண்டாவோ? அடியேனுடைய ஆர்த்தியை தேவரீர் அறியாமையுண்டோ? அறிந்தனவத்தும் இரங்கியருளாமைச்குறுப்பான நைர்க்ருண்யந்தானுண்டோ? அறிவும் அருளுமிருந்தும் ஆர்த்தியை அகற்ற ஆற்றலில்லை என்னப்போமோ? * ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேசஸ் ஸதா காருணிகோபி ஸந், ஸம்ஸார தந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே* ஆகையாலே அடியேனுடைய அபேக்ஷையில்லை யென்று ஒரு கண்ணழிவு சொல்லொணுதபடி ஆர்த்தனாய் இதோ சரணம் புகாநின்றேன் என்றதாயிற்று. ... ... .... (1)

त्वदेक शेषोऽहमनात्मतन्त्रः त्वत्पादलिप्सां दिशता त्वयैव ।
असत्समोऽप्यष्टभुजास्पदेश ! सत्तामिदानीमुपलम्भितोऽस्मि ॥

த்வதேக சேஷோஹ மநாத்மதந்த்ர: த்வத்பாத லிப்ஸாம் திசதா த்வயைவ.
அஸத்ஸமோப்யஷ்ட புஜாஸ்பதேச! ஸத்தா மிதாநீம் ப்ரதிலம்பிதோஸ்மி.

ஹே அஷ்டபுஜாஸ்பதேச! த்வதேகசேஷ: அநாத்மதந்த்ர: அஹம் அஸத்ஸம: அபி த்வத்பாதலிப்ஸாம் திசதா த்வயா ஏவ இதாநீம் ஸத்தாம் ப்ரதிலம்பித: அஸ்மி.

அட்டபுயத்தெம்பெருமானே! தேவரீருக்கே சேஷபூதனாய் ஸ்வாதந்திரியமற்றவனாயிருக்கின்ற அடியேன் இதுவரையில் அஸத்கல்பனாயிருந்தேனாகிலும் தேவரீருடைய திருவடிகளில் ருசியைத்தந்தருளாநின்ற தேவரீராலேயே இப்போது ஸத்தை பெறுவிக்கப்பட்டவனாயினேன்.

* * *—"மருவித்தொழும் மனமேதந்தாய்" என்றும் "இசைவித் தென்னை யுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே!" என்றும் "என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே" என்றும் ஆழ்வார்கள் தெளிவித்தருளின பொருளைச் சிந்தை செய்து பணித்த ச்லோகமிது. "தெளிந்துணர் வொன்றின்மையால் தீவினையேன் வாளாவிருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம்" என்னுமாபோலே கீழ்க்கழிந்த காலங்களில் கண்டவாதிரிந்து அஸத்கல்பனாய்க் கிடந்தேன்; தன்னுடைமையை விட்டுக்கொடுக்கமாட்டாத ஸ்வாமியான தேவரீர் தாமே மடிமாங்காயிட்டுப் பிடிக்குமாபோலே பிடிக்கத் திருவுள்ளம் பற்றித் தம்முடைய திருவடிகளிலே ருசியைப் பிறப்பித்து இப்போது ஸத்தை பெறுவித்தருளினபடியாலே உய்ந்துபோனேன் என்றதாயிற்று.

[அஷ்டபுஜாஸ்பதேச!] அஷ்டபுஜ! என்று விளிக்கலாமாயிருக்க இங்ஙனே விளிப்பது எதற்காக? அஷ்டபுஜனுடைய ஆஸ்பதத்திற்கு ஈசனே! என்று ஏதுக்குச் சொல்லவேணடும்? என்று விசிகித்ஸை பிறக்கும். திருமங்கையாழ்வாருடைய அநுபவத்தை இங்கு உணர்த்தித் தெளிவு பிறப்பிக்கக் கடவோம். பெரிய திருமொழியில் (2-8.) * திரிபுரமூன்றெரித்தானும்* என்கிற திருமொழியினால் திருமங்கையாழ்வார் இத்தலத்தை யநுபவித்தாரென்பது ப்ரஸித்தம். இதற்கு முந்தின திருமொழியில் ஆழ்வார் தாமான தன்மையை இழந்து தாய் வாக்காலே பேசும்படி அடைந்த க்லேசங்களைத் திருவுள்ளம்பற்றின எம்பெருமான் 'இவ்

வாழ்வாரை இப்படியோ நாம் துடிக்கவிட்டோம்! தம் துடிப்பைத் தாமே முறையிட்டுக்
கொள்ளும்படியாகவும் நாம் பிற்பட்டோமே!' என்று முடிமேல் மோதிக்கொண்டு, அடியார்
களுக்குத் தான் உதவின குணங்களையும் பரம விலக்ஷணமான வடிவழகையும் பிரகாசப்
படுத்திக்கொண்டு கச்சிப்பதியொன்றிலே * செம்பொனிலங்கு வலங்கைவாளி திண்சிலை
தண்டொடு சங்கமொள்வாள் உம்பரிருசுடராழியோடு சேடக பொங்கலர்பற்றி அஷ்டபுஜ
னாய்ப் பரமபோக்யனாக ஆழ்வார்க்கு ஸேவைஸாதித்தான். ஆழ்வாரும் கீழ்த்திருமொழியின்
அநுபந்தமாகவே பரகால நாயகியான நிலைமையிலேயே நின்று அப்பெருமானை ஸேவித்தார்;
எற்றைக்கும் எங்குங் கண்டறியாத திருக்கோலமாயிருந்தது. * ஆழியொடும் பொன்னார்
சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன் * என்றாப்போலே அப்பெருமானை இன்னா
ரென்று அறியமாட்டிற்றிலர். அறிந்து கொள்ளாமலிருக்கவும் மனமில்லை. ஸ்வபுத்தியாலே
அறிந்துகொள்ளவும் முடியவில்லை. என்ன செய்வது! நீர் ஆர்? என்று கேட்கலாமென்று
பார்த்தாலோ வாய் எழும்பவில்லை. முகத்தை நேரே பார்த்து வார்த்தை சொல்லமுடியாத
படி சோதிவெள்ளம் அலையெறிந்து தள்ளுகின்றது; அதனால் முகம் நோக்கி நீர் யார்?
என்று கேட்கமாட்டிற்றிலர். 'இவர் நம்முடைய பர்த்தாவாகவே யிருக்கக்கூடும்' என்று
நெஞ்சிலே ஒரு தோற்றமும் தோன்றினமையால் வெட்கத்தாலும் 'நீர் ஆர்?' என்று
கேட்கமாட்டிற்றிலர். கேட்டுத் தெரிந்துகொள்ள விருப்பமோ அதிகரித்துவிட்டது.
அவர்தம்மையே நேரே முகம் பார்த்துக்கேளாமல் வேறொருவரை நோக்கி 'இப் பெரியவர்
யாவர்?' என்று கேட்க, அதற்கு எம்பெருமான் தானே "நான் அட்டபுயகரத்தேன்" என்று
மறுமொழி கூற, படுக்கைத்தலையிலே இப்படிச் சில வார்த்தைகள் நடந்துகொண்டிருப்
பதைப் பரகாலநாயகியின் தாய்மார் தோழிமார் முதலானார் செவியுற்று "நங்காய்! ஏதேனும்
பிரமித்தாயோ? இவை என்ன வார்த்தைகள்?' என்று கேட்க; 'பிரமித்தேனல்லேன்; ஒரு
மஹாபுருஷரை ஸேவிக்கப்பெற்றேன்; அவரை நேராக வினவமாட்டாமல் வேறொருவரை
நோக்கிக் கேட்கும் பாவனையாக 'இவரார்கொல்?' என்று கேட்டேன்; அஷ்டபுஜப்பெரு
மாள் 'நான்தான் அட்டபுயகரத்தேன்' என்று விடை கூறுகிறார் காண்மின்' என்று பரகால
நாயகி தன் தாய்மார்க்கும் தோழிமார்க்கும் நடந்த செய்தியைச் சொல்லுவதாக அமைக்கப்
பட்டது அத்திருமொழி.

இங்கே விமர்சிக்க வேண்டுவதொன்றுண்டு; 'இவரார்கொல்? என்றதற்கு விடை
தருகின்ற எம்பெருமான் 'நான் அஷ்டபுஜன்' என்ன வேண்டியிருக்க, 'அட்டபுயகரத்
தேன்' என்றது ஏன்? என்று. இதற்குக் கேண்மின். 'நான் அட்டபுயன்' என்று
சொல்லிக்கொண்டால் தன்னை எம்பெருமானாகத் தானே வெளியிட்டதாய் விளங்கிவிடும்
அப்படி ஸ்பஷ்டமாகச் சொல்லிக்கொள்ள எம்பெருமானுக்குத் திருவுள்ளமில்லை. வேறு
மனிதனாகப் பொய் சொல்லிக்கொள்ளவும் விருப்பமில்லை; ஆகவே வெகு சாதுரியமாகச்
சொன்ன விடை 'அட்டபுயகரத்தேன்' என்பது. 'அஷ்டபுஜ க்ஷேத்திரத்திற்கு நான்
அதிபதி' என்றதாகவுமாம்; 'அஷ்டபுஜ க்ஷேத்ரத்திலே கிடப்பானொருவன் நான்' என்று
ஸாமான்யமாகச் சொல்லிக் கொண்டதாகவுமாம். துஷ்யந்த மஹாராஜன் வேட்டையாடிக்
கொண்டே சகுந்தலையின் இருப்பிடத்தை யடைந்தபோது இவனை இன்னானென்று தெரிந்து
கொள்ள விரும்பி நீ யார்? என்று கேட்டார்க்கு அரசன் விடை கூறும்போது "பவதிய
பௌரவேண ராஜ்ஞா தர்மாதிகாரே நியுக்த: ஸோஹம்" [புருவம்சத்து ப்ரபுவினாலே தரும
காரியங்களைச் செய்யுமாறு நியமிக்கப்பட்டவன் யான்] என்று சாதுரியமாக விடை கூறினான்

இதற்கு உவமையாகும். புருவம்சத்து அரசனுகிய தன் தந்தையினுல் நியமிக்கப்பட்ட அரசன் தான் என்றும், புருவம்சத்து ராஜாவுக்கு வேலைக்காரன் தான் என்றும் இருவகையாகப் பொருள்படுமாறு உரைத்தவதுபோன்றதேயாம் இதுவும். அஷ்டபுஜாஸ்பதேச! என்றவிதுவும் அந்தச் சாயையிலே யருளிச்செய்ததாம். "அஷ்டபுஜாகிலேச!" என்ற சிலருடைய பாடம் ஸர்வாத்மநா விரஸமென்று தவிர்க்க. சிலர் (அஷ்டபுஜாஸ்பதேச) என்றே பாடங்கொண்டும் பொருளின் மருமமுணராமல் "எட்டு புஜங்களுக்கு இருப்பிடமான ஈசனே" என்றுரைப்பர்; அதுவும் அஸம்பத்தம். மற்றுஞ் சிலர் (அஷ்டபுஜாபதேச!) என்று பாடங் கூறுவர்; அஷ்டபுஜனென்று வ்யபதேச முடையவனே! என்று பொருள் கூறிவிடலாமாயினும் பாடம் ஆசிரியருகந்ததன்று. 'அட்டபுயகரத்தான்' என்கிற ஆழ்வாரருளிச்செயலுக்குச் சேர்ந்தபாடம் (அஷ்டபுஜாஸ்பதேச!) என்பதேயாம் என்று தெளிக. (2)

स्वरूपरूपास्त्रविभूषणाद्यैः परत्वचिन्तां त्वयि दुर्निवाराम् ।
भोगे मृदूपक्रमतामभीप्सञ्छीलादिभिर्वारयसीव पुंसाम् ॥ ३

ஸ்வரூப ரூபாஸ்த்ர விபூஷணாத்யை: பரத்வ சிந்தாம் த்வயி துர்நிவாராம்.
போகே ம்ருதூபக்ரமதாமபீப்ஸந் சீலாதிபிர் வாரயஸீவ பும்ஸாம். (3)

ஹே அஷ்டபுஜ! ஸ்வரூப ரூப அஸ்த்ர விபூஷண ஆத்யை: த்வயி பும்ஸாம் துர்நிவாராம் பரத்வ சிந்தாம் போகே ம்ருதூபக்ரமதாம் அபீப்ஸந் இவ சீலாதிபி: வாரயஸி.

(அஷ்டபுஜப் பெருமானே!) ஸ்வரூபம் திவ்ய மங்கள விக்ரஹம் திவ்யாயுதங்கள் திவ்ய பூஷணங்கள் இவை முதலானவற்றாலே தேவரீரிடத்தில் மனிதர்களுக்கு அவசியம் உண்டாகக்கூடிய பரத்வ சிந்தையை, ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்க வேணுமென்கிற விருப்பமுடையீர்போல ஸௌசீல்ய வாத்ஸல்யாதி குணங்களைக் காட்டித் தடுத்தருளினீர்.

* * *—இந்த ச்லோகத்தின் கருத்தை அநுபவ ரஸிகர்களே உய்த்துணர வல்லவர்கள். அஷ்டபுஜனாய் நின்ற நிலையிலே பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் பொலிய நின்றாலும் பரத்வத்திற் காட்டிலும் ஸௌலப்யமே விஞ்சியிருக்கும்படியைத் திருவுள்ளம்பற்றி அதற்கொரு ஹேது விசேஷத்தை உல்லேகிக்கிறாரிதில். ஸ்வரூபமோ பரத்வமே வடிவெடுத்தது. திவ்யமங்கள விக்ரஹமோ "ரூப மேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே" என்கிற சணக்கிலே பரத்வத்தைக் கோட்சொல்லித் தருகின்றது. * செய்பொனிலங்கு வலங்கைவாளி திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள், உம்பரிருசுடராழியோடு கேடகமொண்மலர் * என்னப்பட்ட அஷ்ட திவ்யாயுதங்களும், * கிரீட மகுட சூடாவதம்ஸ மகர குண்டல க்ரைவேயக ஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தா தாம உதரபந்தந பீதாம்பர காஞ்சீகுண நூபுராத்யபரிமித திவ்ய பூஷணங்களும், "வக்ஷஸ் ஸ்தல்யாம் துலஸி கமலா கௌஸ்துபைர் வைஜயந்தீ ஸர்வேசத்வம் கதயதிதராம் ரங்கதாம்ந:" என்று பட்டரருளிச் செய்தபடியே பரத்வ பிசுநங்களாயிரா நின்றன. ஆக இவற்றையடைய ஸேவிக்கும்போது 'இவன் பராத்பரனல்லனோ? இவனை நாமோ அணுகுவது!' என்று கூசவேண்டியிருக்கும். கூசினவர்கள் * வளவேழுலகு தலையெடுத்துப் பிற்காளிக்க வேண்டியதாயுமிருக்கும். அங்ஙனே ஆகாமைக்காக ஸௌசீல்யாதி குணங்களைக் காட்டி யீடுபடுத்திக் கொள்ளுவது எம்பெருமானுடைய இயல்பு. அவ்வெளிமைக் குணங்களை ஏககாலத்திலேயே முற்றும் காட்டிவிட்டால் பரத்துவத்தை யநுபவிக்கப் பாங்கில்லையாகும். பரத்துவத்தை மட்டும் காட்டிப் போந்தால் அதை யநுபவிக்க அதிகாரிகளில்லை; சீலாதிகளான எளிமைக் குணங்கள் காட்டிலெரித்த நிலாவாகி யொழியும். எம்பெருமான் பரம சதுரனுகையாலே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்க வேண்டி 'இவன் பராத்பரனல்லனோ!' என்கிற சிந்தையே விளையாதபடிக்கு

ஸௌசீல்ய ஸௌலப்யாதிகளான எளிமைக் குணங்களை க்ரமேண காட்டியருளும்படியைக் கூறினாராயிற்று.

[போகே ம்ருது உபக்ரமதாம் அபிப்ஸங்] பரத்வத்தை ப்ரகாசிக்க வொட்டாபல் சீலாதிகளாலே மறைப்பதற்குக் காரணம் சொல்லுகிறதிது. முந்துற முன்னம் பரத்வத்தை யநுபவிக்கப் புக்கால் பெருவெள்ளத்திலே அமிழ்ந்து போம்படியா மத்தனை. .... (3)

शक्तिं शरण्यान्तरशब्दभाजां सारं च संतोल्य फलान्तराणाम् ।
त्वद्दास्यहेतोस्त्वयि निर्विशङ्कं न्यस्तात्मनां नाथ बिभर्षि भारम् ॥ ४

சக்திம் சரண்யாந்தர சப்தபாஜாம் ஸாரஞ்ச ஸந்தோல்ய பலாந்தராணும்.
த்வத்தாஸ்ய ஹேதோஸ் த்வயி நிர்விசங்கம் ந்யஸ்தாத்மநாம் நாத பிபர்ஷி பாரம். (4)

ஹே நாத! சரண்யாந்தர சப்தபாஜாம் சக்திம் பலாந்தராணும் ஸாரம் ச ஸந்தோல்ய த்வத்தாஸ்ய ஹேதோ: த்வயி ந்யஸ்த ஆத்மநாம் பாரம் நிர்விசங்கம் பிபர்ஷி.

எம்பெருமானே! ரக்ஷகர்களென்று பெயர் சுமந்திருக்கும் தேவதாந்தரங்களின் சக்தியையும் இதர க்ஷுத்ர பலன்களின் ஸாரத்தையும் நிறுத்துப் பார்த்து (ஸாரதமமான) தேவரீருடைய கைங்கரியத்தைப் பெறுவதற்காக தேவரீரிடத்திலே நிச்சங்கமாக சரணுகதி செய்தவர்களின் பாரத்தை தேவரீர் ஏற்றுக்கொள்ளுகிறது.

* * *—"ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்." என்றும் "ந ஹி பாலநஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்" என்றும் சொல்லுகிறபடியே ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகராக மாட்டார்கள்; ரக்ஷகரென்று பேர் சுமப்பார் சிலருண்டாகிலும் அவர்கள் க்ஷுத்ர பலன்களைக் கொடுத்து ரக்ஷிக்கவல்லவர்களே யல்லது பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷத்தைத் தர வல்லவர்களல்லர். ஆக, ரக்ஷகம்மந்யர்களான இதரர்களினுடைய சக்தியையும் அவர்கள் பெறுவிக்கக்கூடிய பலன்களின் தன்மையையும் நன்கு ஆலோசித்துப் பார்த்து தேவரீருடைய திருவடிகளில் பண்ணும் அத்தாணிச் சேவகமே ஸ்வரூபாநுரூபமென்று தெளிந்து தேவரீரையே தஞ்சமாகப் பற்றினவர்களுக்கு தேவரீர் ஸகலவித ரக்ஷண துரந்தரராக ஆகின்றது என்றாராயிற்று. .... .... .... (4)

अभीतिहेतोरनुवर्तनीयं नाथ त्वदन्यं न विभावयामि ।
भयं कुतः स्यात् त्वयि सानुकम्पे रक्षा कुतः स्यात् त्वयि जातरोषे ॥ ५

அபீதிஹேதோரநுவர்த்தநீயம் நாத த்வதந்யம் ந விபாவயாமி
பயம் குதஸ் ஸ்யாத் த்வயி ஸாநுகம்பே ரக்ஷா குதஸ் ஸ்யாத் த்வயி ஜாதரோஷே. (5)

ஹே நாத! த்வத்அந்யம் அபீதி ஹேதோ: அநுவர்த்தநீயம் அஹம் ந விபாவயாமி; த்வயி ஸாநுகம்பே ஸதி பயம் குத: ஸ்யாத்? த்வயி ஜாத ரோஷே ஸதி ரக்ஷா குத: ஸ்யாத்?

அஷ்டபுஜப் பெருமானே! தேவரீரைக் காட்டிலும் வேறொரு வ்யக்தியை அபய ஸித்தியின் பொருட்டு ஆச்ரயிக்கத்தக்கதாக நான் அறிகின்றிலேன்; தேவரீர் தயாளுவாக இருக்கும்போது (ஆச்ரிதர்களுக்கு) எங்கிருந்து பயமுண்டாகும்? தேவரீர் நிக்ரஹிக்கத் தொடங்கினால் எங்கிருந்து ரக்ஷை பெற முடியும்?

* * *—"களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்" என்கிற பாசுரத்தை யுட்கொண்டு அருளிச் செய்யும் சுலோகமிது. அபீதிஸ்தவத்தின் தொடக்கத்தில் "அபீதிரிஹ யஜ்ஜுஷாம் யதவதீரிதாநாம் பயம் பயாபயவிதாயிநோ ஜகதி யந்நிதேசே ஸ்திதா:" என்றருளிச் செய்த ச்லோகம் இங்கு அநுஸந்தேயம். ஸம்ஸார பயம் முதலானவற்றைப் போக்க வேணுமானல் தேவரீர் போக்கலாகுமே யொழிய அல்லாதார் போக்க அவகாசமேது? அவர்கள் தங்களுக்கு நேரும் பயத்தையே தாங்கள் போக்கிக்கொள்ள

மாட்டாமல் தேவரீரைத் தஞ்சமாகப் பற்றி நிற்கும்போது எங்கள் பயத்தைப் போக்க ப்ரஸக்திதானுண்டோ? என்கை. தேவரீரைப் பற்றி "நின்னருளே புரிந்திருந்தேன்" என்றிருக்கு மெங்களுக்கு பயந்தானுண்டாகவும் மாட்டாது. தேவரீர் யார் பக்கலில் சீறியருளுகிறதோ அவர்கள் வேறு யாரிடத்திலும் ரக்ஷை பெறமுடியாது. "ப்ரஹ்மா ஸ்வயம்பூச் சதுராநநோ வா..................த்ராதும் ந சக்தா யுதி ராம வத்யம்" என்ற திருவடி வாக்கை நினைப்பது! .... ... .... .... (5)

त्वदेकतन्त्रं कमलासहाय ! स्वेनैव मां रक्षितुमर्हसि त्वम् ।
त्वयि प्रवृत्ते मम किं प्रयासैस्त्वय्यप्रवृत्ते मम किं प्रयासैः ॥ ६

த்வதேகதந்த்ரம் கமலாஸஹாய ! ஸ்வேனைவ மாம் ரக்ஷிதுமர்ஹஸி த்வம்
த்வயி ப்ரவ்ருத்தே மம கிம் ப்ரயாஸை: த்வய்யப்ரவ்ருத்தே மம கிம் ப்ரயாஸை:.

| | |
|---|---|
| ஹே கமலாஸஹாய! த்வம் த்வதேகதந்த்ரம் மாம் ஸ்வேனைவ ரக்ஷிதும் அர்ஹஸி; த்வயி ப்ரவ்ருத்தே ஸதி மம ப்ரயாஸை: கிம்? த்வயி அப்ரவ்ருத்தே ச மம ப்ரயாஸை: கிம்? | லக்ஷ்மீபதியான அஷ்டபுஜப் பெருமானே! தேவரீருக்கே அடைக்கலமான அடியேனை தேவரீர் ஸ்வயமாகவே ரக்ஷிக்கக்கடவீர்; (என்னைக்காத்தருள) தேவரீர் ப்ரவர்த்திக்குமளவில் என்னுடைய ப்ரயாஸங்கள் அகிஞ்சித்கரங்கள்; தேவரீர் ப்ரவர்த்தியாதவளவிலும் அப்படியே. |

* * *—கீழ் ச்லோகத்தில் அநந்யோபேயத்வம் அநுஸந்திக்கப்பட்டது. இதில் அநந்யோபாயத்வம் அநுஸந்திக்கப்படுகிறது. "ஸ்வப்ராப்தௌ ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ" "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்று சாஸ்த்ரார்த்தத்தைத் தெளிவாக நிஷ்கர்ஷித்தருளினவராகையாலே தம் பக்கலில் ஒரு கைம்முதலுமில்லாமையையும், எவ்விதமான கைம்முதலையும் ப்ரதீக்ஷியாமல் ரக்ஷித்தருளுகைக்கீடாக அத்தலையிலுள்ள பூர்த்தியையும் அருளிச் செய்கிறாராயிற்று. இவ்வர்த்தத்தையே வரதராஜ பஞ்சாசத்தில் "கிம் வா கரீச! க்ருபணே மயி ரக்ஷணீயே தர்மாதிபாஹ்யஸஹகாரி கவேஷணேந, நந்வஸ்தி விச்வபரிபாலன ஜாகரூகஸ் ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ் ஸஹாய:." என்கிற ச்லோகத்தில் விவரித்தருளினபடி காண்க.

[கமலாஸஹாய!] அடியேனை ரக்ஷித்தருளுமிடத்தில் தேவரீருக்கு ஸஹாயாபேக்ஷைக்கு ப்ரஸக்தியில்லை; ஒருகால் ஸஹாயாபேக்ஷயுண்டாகில் பிராட்டியையே ஸஹாயமாகக் கொள்ளவடுக்கும் என்று ஸூசிப்பிக்கிறபடி. * நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பிக்குமவள் பிராட்டியாகையாலே அந்த புருஷாகார பலத்தாலே ரக்ஷணம் தப்பாதென்றிருக்கிறார். ஸ்வேனைவ என்றது—என்னுடைய ப்ரவ்ருத்திலேசத்தையும் ப்ரதீக்ஷியாதே ஸ்வயமாகவே என்றபடி. "அகதிம் சரணாகதம் ஹரே! க்ருபயா கேவல மாத்மஸாத்குரு" என்றாரிறே ஆளவந்தார்.

'நான் க்ருபாளுவாகிலும், பேறு உம்மதானபின்பு உம்முடைய ப்ரவ்ருத்தியும் வேண்டியிருந்தது காணும்' என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றுவதாக நினைத்து, தம்முடைய ப்ரவ்ருத்தி ஸர்வாத்மநா அகிஞ்சித்கரமென்பதை உத்தரார்த்தத்தாலே அருளிச் செய்கிறார். "வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்றுமிதுவல்லால் மாரியார் பெய்கிற்பார் மற்று" என்று பூதத்தாழ்வாரருளிச் செய்ததை இங்கு நினைப்பது. ஒருவனுக்குக் கைகொடுப்

பதாக எம்பெருமான் ப்ரவர்த்திக்குமளவில் அவனுடைய ப்ரயாஸங்களுக்குப் பலனென்று
மில்லை. அப்பெருமான் தான் ப்ரவர்த்தியாதவளவில் இவன் எத்தனை ப்ரயாஸங்கள் பட்டா
லும் பலனென்றுமில்லையாம். "த்வயி ரக்ஷதி ரக்ஷகை: கிமந்யை: த்வயி சாரக்ஷதி ரக்ஷகை:
கிமந்யை:" என்று காமாஸிகா ஸ்துதியிலுமருளிச் செய்வர். "உன்னாலல்லால் யாவராலு
மொன்றுங் குறை வேண்டேன்." என்ற திருவாய்மொழியின் உள்ளுறை காண்க. (6)

समाधिभङ्गेष्वभिसंपतत्सु शरण्यभूते त्वयि बद्धकक्ष्ये ।
अपत्रपे सोढुमकिञ्चनोऽहं दूराधिरोहं पतनं च नाथ ॥ ७

ஸமாதிபங்கேஷ்வபிஸம்பதத்ஸு சரண்யபூதே த்வயி பத்தகக்ஷ்யே
அபத்ரபே ஸோடுமகிஞ்சநோஹம் தூராதிரோஹம் பதநஞ்ச நாத! (7)

ஹே நாத! சரண்யபூதே த்வயி பத்தகக்ஷ்யே ஸதி, ஸமாதிபங்கேஷு அபிஸம்பதத்ஸு தூராதிரோஹம் பதநஞ்ச ஸோடும் அகிஞ்சந: அஹம் அபத்ரபே.

அஷ்டபுஜப்பெருமாளே! ஸர்வசரண்யரான தேவரீர் காக்குமியல்வினரா யிருக்கையில், உபாயாநுஷ்டாந விரோதிகளான பாபங்கள் மிடைதரு மளவில் (நமக்குத் தகாத) பக்தியோகாதிகளில் ஏறுவதும் சருக்கி விழு வதுமாகிற கஷ்டங்களை ஸஹிக்க வெட்கப்படுகின்றேன்.

***—சாஸ்த்ரங்களிலே பக்தி யோகாதிகள் மத்ப்ராப்தி ஸாதநமாகச் சொல்லி யிருக்கையாலே ஜ்ஞாந சக்திவைகல்ய மில்லாதவரான நீர் அவற்றிலே யிழிந்து அவ்வழி யாலே என்னைப் பெறலாகாதோவென்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினனாக, அதற்கு விண்ணப்பஞ் செய்கிறாரிதில். ஸ்வப்ரவ்ருத்திகள் ஸர்வாத்மநா ஸாபாயங்களாகையாலே அவற்றுக்கு இடையூறுகள் விளைந்தே தீரும். "பதநாந்தாஸ் ஸமுச்ச்ரயா:" என்கிற கணக் கிலே ஆரூட பதிதனாக ப்ராப்தமாகக் கூடும். ஸித்தோபாய பூதரான தேவரீரை வரித்து "நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" என்றிருக்கக் கடவனான அடியேன் ஒருகால் பக்தியோகத்தில் ஆரோஹண நிலையையும் அடுத்தபடி பாப ப்ராசுர்யத்தாலே கீழ்விழும் நிலைமையையும் ஸஹிக்ககில்லேன். உன்கைபார்த்திருக்குமதுக்கு மேற்பட க்ஷேம மில்லை யென்று கொண் டேன் என்றாராயிற்று. ... ... ... ... (7)

प्राप्ताभिलाषं त्वदनुग्रहान्मां पद्मानिषेव्ये तव पादपद्मे ।
आदेहपातादपराधदूरमात्मान्तकैङ्कर्यरसं विधेयाः ॥ ८

ப்ராப்தாபிலாஷம் த்வதநுக்ரஹாந்மாம் பத்மாநிஷேவ்யே தவபாதபத்மே
ஆதேஹபாதாதபராததூரம் ஆத்மாந்தகைங்கர்யரஸம் விதேயா:. (8)

ஹே நாத! பத்மாநிஷேவ்யே தவ பாதபத்மே த்வதநுக்ரஹாத் ப்ராப்தாபிலாஷம் மாம் ஆதேஹபாதாத் அபராததூரம் ஆத்மாந்தகைங்கர்யரஸம் விதேயா:

வாரீர் அஷ்டபுஜப்பெருமாளே! பெரியபிராட்டியார் விரும்பத்தக்க தேவரீ ருடைய பாதாரவிந்தத்தில் தேவரீருடைய அநுக்ரஹமடியாகவே ருசி கொண்ட அடியேனை இவ்வுடல் விழுமளவும் பகவதபசார பாகவதாபசா ராதி வைதேசிகனாயும் யாவதாத்மபாவி கைங்கர்ய ஸக்தனாயும் செய்தருளக் கடவீர்.

***—பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலே "ச்வேவ தேவஹவிஷ: ச்ருதம் த்வாம் ச்ரீயோர் ஹமகாமயே" என்றநுந்தித்த கணக்கிலே நைச்சியமநுஸந்திக்கிறார் பூர்வார்த்தத்தில். [பத்மா நிஷேவ்யே தவ பாதபத்மே.] தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய் விருப்புமா போலேயன்றோ பெரிய பிராட்டியார் விரும்பக்கடவதான தேவரீருடைய பாதாரவிந்தத்தை அடியேன் விரும்புவது. ஆனால் நானாக விரும்பிற்றிலேன். தேவரீராக விரும்பச் செய்த

தத்தனே. இம்மஹோபகாரம் செய்தருளினதுபோலவே யாவச்சரீரபாதம் அபசாரப்ரஸக்தி கள் ஏற்படாதபடிக்கும் நித்யகைங்கர்ய குதூஹலம் குன்றுதபடிக்கும் அநுக்ரஹித்தருள வேணுமென்றாராயிற்று. ... .... ... ... (8)

प्रपन्नजनपाथेयं प्रपित्सूनां रसायनम् । श्रेयसे जगतामेतच्छ्रीमदष्टभुजाष्टकम् ॥ ९

ப்ரபந்நஜநபாதேயம் ப்ரபித்ஸூநாம் ரஸாயநம்
ச்ரேயஸே ஜகதாமேதத் ஸ்ரீமதஷ்டபுஜாஷ்டகம் (9)

ஸ்ரீமதஷ்டபுஜ அஷ்டகம் ஏதத் ப்ரபந்நஜந பாதேயம் ப்ரபித்ஸூநாம் ரஸாயநம் ஜகதாம் ச்ரேயஸே } இந்த அஷ்டபுஜாஷ்டகமானது ப்ரபந்நர்களுக்கு வழித்துணையாயும் ப்ரபந்நர்களாக விரும்புமவர்களுக்கு ரஸாயனமாயும் ஜகத்துக்கு ச்ரேயஸ் கரமாயுமிருக்கும்.

* * *—"கச்சதாம் தூரமத்வாநம் த்ருஷ்ணமூர்ச்சித சேதஸாம், பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்." என்ற ப்ரமாணச் சாயையிலே ப்ரதபபாதமருளிச்செய்தபடி. ப்ரபித்ஸூநாம் என்றது ப்ரபத்தி பண்ண விரும்புமவர்களுக்கு என்றபடி. ப்ரபத்துமிச்சவ:—ப்ரபித்ஸவ:; தேஷாம்-ப்ரபித்ஸூநாம். ஆசார்யஸமாச்ரயணம் பண்ணினவர்களுக்கும், அதுபண்ண ருசியுடையார்க்கும், மற்றுமுள்ளார்க்கும் ஹிதமான அர்த்த விசேஷங்கள் இந்த ஸ்துதியில் நிரம்பியுள்ளன என்பது கருத்து.

शरणागतसंत्राणत्वराद्विगुणबाहुना । हरिणा वेङ्कटेशीया स्तुतिः स्वीक्रियतामियम् ॥ १०

சரணாகதஸம்த்ராணத்வராத்விகுணபாஹுநா
ஹரிணா வேங்கடேசீயா ஸ்துதி: ஸ்வீகரியதாமியம். (10)

சரணாகத ஸம்த்ராண த்வராத்விகுண பாஹுநா ஹரிணா வேங்கடேசீயா இயம் ஸ்துதி: ஸ்வீக்ரியதாம் } சரணாகதர்களைக் காத்தருள்வதில் பதற்றத்தினால் இரட்டித்த திருக்கைகளையுடைய திருவட்டபுயகரத்தானால் ஸ்ரீமத் வேங்கடநாதார்யருடையதான இந்த ஸ்துதி ஸ்வீகரிக்கப்படட்டும்.

* * *—"இதனால் இந்த ஸ்துதிக்ரந்தத்தை ஸ்ரீமதஷ்டபுஜநாதனுடைய திருவடிகளில் ஸமர்ப்பிக்கிறார். "சதுர்ணாம் புருஷார்த்தாநாம் தாதா தேவச் சதுர்ப்புஜ:" என்கிறபடியே சதுர்ப்புஜனாகப்ரஸித்தனான எம்பெருமான் அஷ்டபுஜனாக ஸேவைஸாதிப்பதற்கு ஹேதுத்ப்ரேக்ஷை பண்ணுகிறார் பூர்வார்த்தத்தாலே. "த்வரா. த்விகுண" என்ற விடத்தில் (த்வரயேவ த்விகுண) என்று கொள்ளக்கடவது. .... .... .... (10)

॥ इति श्रीकवितार्किकसिंह सर्वतन्त्रस्वतन्त्र वेदान्ताचार्यकृतिषु अष्टभुजाष्टकं समाप्तम् ॥

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாண குணசாலிநே,
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம அண்ணங்கராசாரியரியற்றிய
மநோஹரா என்னுமுரையோடு கூடிய
அஷ்டபுஜாஷ்டகம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:
ஸ்ரீமதே வேதாந்த மஹாகுரவே நம:.

# ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

# காமாஸிகாஷ்டகம்

## * कामासिकाष्टकम् *

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

உரையவதாரிகை:— "மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை" என்று பெரிய தி மடலில் திருமங்கையாழ்வாரும், மூன்றுந்திருவந்தாதியில் * சிறந்தவென்சிந்தையும் * அ ரிவ்வுலகம் * விண்ணகரம் வெஃகா * என்கிற பாசுரங்களில் பேயாழ்வாரும் மங்களா சா னம் செய்தருளின திருப்பதி வேளுக்கையென்பது. இத்தலத்தெம்பெருமான் ந்ருஸிம்ஹ ரூபியாக ஸேவைஸாதித்தருள்வதனால் 'சிங்கப்பெருமாள் கோயில்' என்றும் வழங்க பெறுமித்தலம்; 'வேள் இருக்கை' என்கிற இரண்டு சொற்கள் சேர்ந்து வேளுக்கையென மருவிற்று. வேள் என்று ஆசைக்குப் பெயர்; ஆசையோடு எழுந்தருளியிருக்குமிடமென் வாறு. காமாஸிகா என்ற வடமொழி நாமத்தின் பொருளுமிதுவேயாகும். காமேந ஆஸிகா காமாஸிகா. இதில் முதல் சுலோகத்திலேயே "காமாத் அதிவஸந்" என்று இப்பொரு விவரிக்கப்பட்டதாயிற்று. இப்பொருளிலேயே 'மதநாஸிகா' என்றுமருளிச் செய்கிற காமசப்தமும் மதநசப்தமும் பர்யாயமிறே.

ஒவ்வோரெம்பெருமானுக்கும் எட்டெட்டாகவே ஸ்துதிகளையிட்டருள்வது "இ மலரெட்டுமிட்டு" என்றும் * கந்தமாமலரெட்டுமிட்டு * என்றும் திருமங்கையாழ்வாரருளி செய்தகணக்கிலே அஷ்டவிதபுஷ்பங்களையிடுவதோடொக்கும். "அஹிம்ஸா ப்ரதமம் புஷ்ப புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:, ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:, ஜ்ஞாநம் புஷ்ப தப:புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவ ச; ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகர பவேத்" என்று அஷ்டவித புஷ்ப விவரணம் காணக. ஆண்டாள் பாமாலைவேறாகவும் பூமா வேறாகவும் ஸமர்ப்பித்தாள்; அங்ஙனன்றியே ஆசிரியர் பாமாலையையே பூமாலையாக ஸம பிக்கிறார் போலும். ... ... ... ...

श्रुतीनामुत्तरं भागं वेगवत्याश्च दक्षिणम् । कामादधिवसञ्जीयात्कश्चिदद्भुतकेसरी ॥

ச்ருதீநா முத்தரம் பாகம் வேகவத்யாச் ச தக்ஷிணம்
காமாததிவஸந் ஜீயாத் கச்சிதத்புதகேஸரீ.

ச்ருதீநாம் உத்தரம் பாகம் வேகவத்யா: தக்ஷிணம் பாகம் ச காமாத் அதிவஸந் கச்சித் அத்புத கேஸரீ ஜீயாத்.
} வேதங்களின் உத்தரபாகமான உபநிஷத் பாகத்திலும் வேகவதி தக்ஷிண பாகத்திலும் விருப்பத்தோடு எழுந்தருளியிருக்கி ஒரு அத்புதஸிம்ஹம் வாழ்க.

* * *—"கச்சித் அத்புதகேஸரீ ஜீயாத்" என்று மங்களாசாஸநமாக உப மிக்கிறார். இங்கு அற்புதமாவது யாதென்னில், தென்புறத்திலிருப்பவர் வடபுறத்திலிருக்கமு யாது, வடபுறத்திலிருப்பவர் தென் புறத்திலிருக்கமுடியாது. ஆனால் இந்தவிலக்ஷணகே ~~உபயபாகத்திலிருக்க முடியாது. ஆனல் இந்த விலக்ஷணகேஸ~~ரி உபயபாகத்திலுமிருப்

தான் அற்புதம். இருக்கும்படிதா னெங்ஙனே யென்னில்; ச்ருதிகளினுடைய உத்தர பாகத்திலும் வேகவதியினுடைய தக்ஷிண பாகத்திலு மிருக்கிறபடி. உபநிஷத் ப்ரதிபாத்யனுமிருக்கும் பகவான் வேகவதீ தக்ஷிணபாகத்திலே ஸேவை ஸாதிக்கும்படி சொல்லிற்றாயிற்று. ஸர்வ வியாபியான பகவான் ஒரு தேச விசேஷத்திலே யிருப்பது பக்தாநுக்ரஹார்த்தமான ஸங்கல்ப விசேஷத்தினாலே யாதலால் அது சொல்லுகிறது [காமாத் அதிவஸந்] என்று.

வேகவதீநதியானது இப்போது இத்தலத்திற்குத் தென்புறத்தே பெருகுவதாகக் காணப்பட்டாலும் வேள்வியைக் கெடுக்கப் பெருகிவந்தபோது இத்தலத்திற்கு வடபுறமாகவே வந்து வெஃகணைக்கிடந்த பெருமாளுக்கு வெள்கி அந்தர்வாஹிநியாகச் சென்றதாய் இதிஹாஸமாகையாலே “வேகவத்யா: தக்ஷிணம் பாகம் அதிவஸந்” என்று இங்குக்கூறியது குறையற்றதே யென்க. ... ... ... (1)

तपनेन्द्वग्निनयनस्तापानपचिनोतु नः । तापनीयरहस्यानां सारः कामासिकाहरिः ॥ २

தபநேந்த்வக்நி நயநஸ் தாபாநபசிநோது ந:,
தாபநீயரஹஸ்யாநாம் ஸார: காமாஸிகாஹரி:. (2)

| | |
|---|---|
| தபந இந்து அக்நி நயந: தாபநீய ரஹஸ்யாநாம்ஸார: காமாஸிகா ஹரி: ந: தாபாந் அபசிநோது | ஸூர்ய சந்திர அக்நிகளைக் கண்களாக வுடையனும் ந்ருஸிம்ஹதாபநீயோபநிஷத் ஸாரபூதனு மிருக்கிற வேளுக்கையாளரி யெம்பெருமான் நம்முடைய தாபங்களைத் தொலைத்திடுக. |

* * *—ஸூரிய சந்திரர்கள்போன்ற இரண்டு திருக்கண்களையும் நெருப்புப்பொறி பறக்க நின்ற நெற்றிக் கண்ணையுங்கொண்டு திருவவதரித்தவராய், ந்ருஸிம்ஹதாபநீயோபநிஷத்தின் ஸர்வஸ்வமாய் விளங்குபவரான வேளுக்கையாளரிப் பெருமாள் * திங்களுமாதித்தியனு மெழுந்தாற்போல் அங்கணிரண்டுங்கொண்டு எங்கள்மேல் நோக்கி நமதுதாபங்களைத் தவிர்த்தருளவேணு மென்றாராயிற்று.

आकण्ठमादिपुरुषं कण्ठीरवमुपरि कुण्ठितारातिम् । वेगोपकण्ठसङ्गात् विमुक्त वैकुण्ठ बहुमतिमुपासे ॥ ३

ஆகண்டமாதிபுருஷம் கண்டீரவமுபரி குண்டிதாராதிம்,
வேகோபகண்ட ஸங்காத் விமுக்த வைகுண்ட பஹுமதிமுபாஸே. (3)

| | |
|---|---|
| ஆகண்டம் ஆதி புருஷம் உபரி கண்டீரவம் குண்டித அராதிம் வேகா உபகண்ட ஸங்காத் விமுக்த வைகுண்ட பஹுமதிம் உபாஸே. | திருக்கழுத்தளவும் புராண புருஷராயும் அதற்குமேல் சிங்க முகமாகவும் தோன்றி சத்ரு நிரஸநம் செய்தவரும், வேகவதி ஸமீபருசியினாலே வைகுண்ட வாஸத்தில் ருசியற்றவருமான பெருமாளைப் பணிகின்றேன். |

* * *—இரணியன் பெற்றிருந்த வரம் பழுதுபடாதபடி தோன்றி அவனைக் கொல்ல வேண்டிவந்தபடியாலே நரங்கலந்த சிங்கமாய்த் தோன்றினனாயிற்று. கழுத்துக்குக் கீழொருபடியும் மேலொருபடியுமாகி சத்ருஸம்ஹாரம் செய்தருளினபடியைப் பூர்வார்த்தத்தாலே யருளிச் செய்தார். உகந்தருளின நிலங்களிலே வர்த்திக்கும்போது திருநாட்டில் பண்ணும் அபிநிவேசத்தை இங்கே பண்ணிப் போரும்படியை உத்தரார்த்தத்தாலே அருளிச் செய்தாராயிற்று. ... .... .... ... (3)

बन्धुमखिलस्य जन्तोः बन्धुर पर्यङ्क बन्ध रमणीयम् ।
विषम-विलोचनमीडे वेगवती पुलिन केलि नरसिंहम् ॥ ४

பந்துமகிலஸ்ய ஜந்தோ: பந்துரபர்யங்கபந்தரமணீயம்
விஷமவிலோசநமீடே வேகவதீ புலிந கேளிநரஸிம்ஹம் 4

அகிலஸ்ய ஜந்தோ: பந்தும் பந்துர பர்யங்கபந்த ரமணீயம் விஷம விலோசநம் வேகவதீ புளிநகேளி நரஸிம்ஹம் ஈடே. } ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸகலவித பந்துவும், அழகிய பர்யங்க பந்தங்கொண்டு பரம போக்யராயிருப்பவரும் (இரண்டாம் ச்லோகத்திற்சொன்னபடி) விஷமமான திருக்கண்களை யுடையவரும் வேகவதி மணற்குன்றிலே விஹார ரஸிகருமான அழகிய சிங்கரைத் துதிக்கின்றேன்.

* * *—"மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்றும், "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன் மக்களும் மேலாத்தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்றும் உபய வேதங்களு முத்கோஷித்தபடியே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸகலவித பந்துவாயும், பர்யங்கபந்தமென்று வழங்கப்படுகிற ஆஸநபந்த விசேஷத்தாலே பரமபோக்யராயும், கார்யார்த்தமாக ஏறிட்டுக்கொண்ட மூன்றுவதான நெற்றிக் கண்ணை யுடையராயும் வேகவதிக்கரையிலே விளங்குகின்றவராயுமுள்ள வேளுக்கையாளரி யெம்பிரானைத் துதிக்கின்றே னென்றுராயிற்று. ... .... .... (4)

स्वस्थानेषु मरुद्गणान् नियमयन् स्वाधीन सर्वेन्द्रियः
पर्यङ्क स्थिर धारणा प्रकटित प्रत्यङ्मुखावस्थितिः ।
प्रायेण प्रणिपेदुषः प्रभुरसौ योगं निजं शिक्षयन्
कामानातनुतादशेष जगतां कामासिकाकेसरी ॥ ५

ஸ்வஸ்தாநேஷு மருத்கணாந் நியமயந் ஸ்வாதீநஸர்வேந்த்ரிய:
பர்யங்கஸ்திரதாரணு ப்ரகடிதப்ரத்யங் முகாவஸ்திதி:
ப்ராயேண ப்ரணிபேதுஷாம் ப்ரபுரஸௌ யோகம் நிஜம் சிக்ஷயந்
காமாநாதநுதாதசேஷஜகதாம் காமாஸிகா கேஸரீ. (5)

மருத்கணாந் ஸ்வஸ்தாநேஷு நியமயந் ஸ்வாதீநஸர்வேந்த்ரிய: பர்யங்கஸ்திரதாரணு ப்ரகடித ப்ரத்யங்முக அவஸ்திதி; ப்ரணிபேதுஷாம் நிஜம் யோகம் ப்ராயேண சிக்ஷயந் ப்ரபு: அஸௌ அசேஷ ஜகதாம் காமாந் ஆதநுதாத். } (1) தேவ ஸமூஹங்களை (2) ப்ராணுபாநாதிவாயு ஸமூஹங்களை உரியஸ்தானங்களில் நிறுத்தி அடக்கியாள்பவரும் (1) எல்லாருடைய இந்த்ரிய வ்ருத்திகளும் ஸ்வாதீநமாயிருக்கப் பெற்றவரும் (2) ஸகலேந்த்ரியங்களையும் ஸ்வாதீநமாகவுடையவரும், (1) பர்யங்கமென்கிற ஆஸனபந்த விசேஷத்தோடே கூடி மேற்குத் திசையை நோக்கி யிருப்பவரும், (3) ஆஸநவிசேஷஸ்தைர்யத்தாலே பராகர்த்தாவலோகனமற்று ப்ரத்ய கர்த்தாவலோகநநிஷ்டரும், தம்மை வணங்கினவர்களுக்குத் தம்முடைய யோகத்தைப் பயில்விப்பவர் போன்றவருமான இந்த காமாஸிகாநரஹரி ஸ்வாமியானவர் ஸகலஜந்துக்கும் மநோரத பூர்த்திகளைச் செய்விக்கவேணும்.

* * *—இந்த ச்லோகத்தில் ஆச்சரியமான ச்லேஷமுள்ளது. நரஸிம்ஹ பகவானை யோகந்ருஸிம்ஹனென்றும் வ்யபதேசிப்பதுண்டு. யோகாஸனத்திலிருக்கிறநரஸிம்ஹனென்று அதற்குப்பொருள். யோகசாஸ்த்ரத்தில் வல்லவனான நரஸிம்ஹனென்றும் பொருள்கொள்ள ஔசித்யமுண்டென்று திருவுள்ளம்பற்றி அப்பொருளுக்கும் சேர ச்லேஷபங்கியாலருளிச்செய்கிறார். [ஸ்வஸ்தாநேஷு மருத்கணாந் நியமயந்] மருத்கண மென்பதற்கு தேவதாஸமூஹமென்றும் வாயுஸமூஹமென்றும் பொருள் ப்ரஸித்தமே. நரஸிம்ஹன் பரமபுருஷனாகையாலே "பீஷாஸ்மாத் வாத: பவதே. பீஷோதேதி ஸூர்ய:" இத்யாதி ச்ருதியின்படியே ஸகல தேவதாஸமூஹங்களையும் அவ்வோஸ்தானங்களில் நியமிக்க வல்லவனாயிருப்பன். யோகியானவன் ப்ராணுபாநாதி வாயுவர்க்கங்களை அவ்வவற்றுக்கு உரியவிடங்களிலே அடக்கியாள வல்லவனாயிருப்பன். [ஸ்வாதீந ஸர்வேந்த்ரிய:] ஸர்வேஷாம் இந்த்ரியாணி ஸ்வாதீநாநி யஸ்ய என்று நரஸிம்ஹபக்ஷத்தில் விக்ரஹம். ஸர்வாணி ச தாநி இந்த்ரியாணி ஸர்வேந்த்ரியாணி,

தாநி ஸ்வாதீநாநி யஸ்ய என்று யோகி பக்ஷத்தில் விக்ரஹம். ஸர்வேச்வரன் ஹ்ருஷீகேசனுகையாலே எல்லாருடைய இந்த்ரிய வ்ருத்திகளையும் ஸ்வாதீநமாக வுடையனுயிருப்பன். யோகியானவன் ஜிதேந்த்ரியனுயிருப்பன்.

[பர்யங்கஸ்திரதாரணு ப்ரகடித ப்ரத்யங்முகாவஸ்திதி:] பர்யங்காஸனமென்கிற யோகாஸந விசேஷங்கொண்டு மேற்றிசை நோக்கி ஸேவை ஸாதிப்பவர் அழகியசிங்கர். யோகியோவென்னில்; அந்த ஆஸன விசேஷத்திலே ஊற்றங்கொண்டு பராகர்த்தவிமுகனுய் ப்ரத்யகர்த்த அபிமுகனுயிருப்பன். ஆக இங்ஙனே யிருந்துகொண்டு உபாஸகர்களுக்கு ஸ்வகீயயோகத்தை சிக்ஷித்தருளுகிறுரோ! என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படி யிராநின்ற வேளுக்கையாள்ரிப் பெருமாள் ஸகல ஜகத்துக்கும் அபேக்ஷிதங்களை யளித்தருளவேணு மென்றதாயிற்று. .... (5)

विकस्वर नख स्वरु क्षत हिरण्य वक्षः स्थली-
निरर्गल विनिर्गलद्रुधिर सिन्धु सन्ध्यायिताः ।
अवन्तु मदनासिकामनुजपञ्चवक्त्रस्य माम्
अहंप्रथमिकामिथःप्रकटिताहवा बाहवः ॥ ६

விகஸ்வரநக ஸ்வருக்ஷத ஹிரண்யவக்ஷஸ்ஸ்தலீ
நிரர்களவிநிர்களத்ருதிரஸிந்து ஸந்த்யாயிதா:
அவந்து மதநாஸிகா மநுஜபஞ்சவக்த்ரஸ்ய மாம்
அஹம்ப்ரதமிகா மித: ப்ரகடிதாஹவா பாஹவ: (6)

| | |
|---|---|
| விகஸ்வர - நக-ஸ்வரு-க்ஷத ஹிரண்ய. வக்ஷஸ்ஸ்தலீ-நிரர்களவிநிர்களத் ருதிரஸிந்து-ஸந்த்யாயிதா: மதநாஸிகாமநுஜபஞ்சவக்த்ரஸ்ய பாஹவ: அஹம்ப்ரதமிகா மித: ப்ரகடித ஆஹவாஸ் ஸந்த: மாம் அவந்து | மலர்ந்த நகங்களாகிற வஜ்ராயுதத்தினுல் பிளக்கப்பட்ட இரணியனது மார்பில் நின்று தாராளமாகப் பெருகுகின்ற குருதி நதியினுல் சிவந்திருக்கின்ற வேளுக்கையாளரியின் திருக்கைகள் அஹம்பூர்விகா விவாதத்தைச் செய்துகொண்டு என்னை ரக்ஷிக்கக் கடவன். |

* * *—இதில் பூர்வார்த்தம் முழுவதும் ஒரேபதம். ஸ்வரு வென்று வஜ்ரத்திற்குப் பெயர்; மலர்ந்த திருவுகிர்களாகிற வஜ்ராயுதத்தினுலே பிளக்கப்பட்டது இரணியனுடைய வக்ஷஸ்ஸ்தலம். அதில் நின்றும் புங்காநுபுங்கமாகப் பெருகுகின்றதாம் குருதி வெள்ளம். அதனுலே அந்தியம்போது போன்றிருக்கின்றனவாம் நாஸிம்ஹனுடைய பாஹுக்கள். அதாவது சிவந்திருக்கின்றனவென்கை. [மதநாஸிகா மநுஜபஞ்சவக்த்ரஸ்யபாஹவ:] வேளுக்கையாளரியினுடைய பாஹுக்களெனறபடி. அவை என்ன செய்யவேணுமென்னில்; [அஹம்ப்ரதமிகாமித: ப்ரகடிதாஹவாஸ் ஸந்த: மாம் அவந்து] 'நான் முன்னே ரக்ஷிக்கக் கடவேன், நான் முன்னே ரக்ஷிக்கக் கடவேன்' என்று பரஸ்பரம் ஸ்பர்த்தை செய்துகொண்டு என்னை ரக்ஷிக்கவேணுமென்கை. 'அஹமேவ பூர்வம். அஹமேவ பூர்வம்' என்கிற விவாதம்—அஹம்ப்ரதமிகா. .... ... .... ... (6)

सटा पटल भीषणे सरभसाट्टहासोद्भटे
स्फुरत्क्रुधि परिस्फुट भ्रुकुटिकेऽपि वक्त्रे कृते ।
कृपा कपट केसरिन् दनुज डिम्भ दत्त स्तना
सरोजसदृशा दृशा व्यतिविषज्य ते व्यज्यते ॥ ७

ஸடாபடலபீஷணே ஸரபஸாட்டஹாஸோத்படே
ஸ்புரத்க்ருதிபரிஸ்புடப்ருகுடிகேபி வக்த்ரே க்ருதே,
க்ருபாகபடகேஸரிந்! தநுஜடிம்பதத்தஸ்தநா
ஸரோஜஸத்ருசா த்ருசா வ்யதிவிஷஜ்ய தே வ்யஜ்யதே. (7)

கபடகேஸரிந் தே வக்த்ரே ஸடா படல பீஷணே ஸரபஸ அட்ட ஹாஸ உத்படே ஸ்புரத்க்ருதி பரிஸ்புடப்ருகுடிகே க்ருதே ஸத்யபி தநுஜடிம்பதத்தஸ்தநா க்ருபா ஸரோஜஸத்ருசா த்ருசா வ்யதிவிஷஜ்ய வ்யஜ்யதே — வாரீர் மாயாஸிம்ஹ பகவானே! தேவரீருடைய திருமுக மண்டலமானது உளை மயிர்களின் திரளாலே பயங்கரமாயும், பதறி யெழுந்த கர்ஜனையினாலே க்ரூர மாயும், மேலெழுந்த சீற்றத்தை யுடையதாயும், விளங்குகின்ற புருவநெறிப்பை யுடையதாயும் செய்யப்பட்டபோதிலும் ப்ரஹ்லாதாழ்வானை யநுக்ரஹித்த தேவரீருடைய க்ருபையானது தாமரைபோன்ற திருக்கண்ணோடே சேர்ந்து மிக விளங்காநின்றது.

***—"அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய்" என்றும் "எரிந்தபைங்கணிலங்கு பேழ்வாய் எயிற்றொடு இதெவ்வுருவென்று இரிந்துவானோர் கலங்கியோட விருந்தவம்மான்" என்றும் சொல்லுகிறபடியே மஹாபயங்கரரூபியாக ஆளரி அவதரித்தாலும் "ஸ்மேராநநாக்ஷி கமலைர் நமத: புநாநாந் தம்ஷ்ட்ராகதாப்ருகுடிபிர் த்விஷதோ துநாநாந்" என்ற கணக்கிலே ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணாததாயும் அநுகூலர்க்கு ஸௌம்யமாயுமிறேயிருப்பது திரு முகமண்டலம். அதுதன்னை யநுபவிக்கிறாரிதில். வக்த்ரே என்கிற விசேஷ்யத்திற்கு நான்கு விசேஷணங்கள் இடப்பட்டன. ஸடாபடலங்களினால் பயங்கரமாயும் ஸிம்ஹகர்ஜனையினால் உத்படமாயு மிருக்குமிருப்புக்கு மேலே சீற்றத்தையும் புருவநெறிப்பையும் ஏறிட்டுக்கொண் டதனால் ஆஸுரப்ரக்ருதிகளுக்கு அணுகவொண்ணாத நிலை சொல்லிற்றாயிற்று. இந்த நிலைமையிலும் *பள்ளியிலோதிவந்த சிறுக்கன்மேல் திருவருள் வெள்ளம் குறையற்றிருக்கு மிருப்பு உத்தரார்த்தத்தில் பேசப்படுகிறது.

[தநுஜடிம்பதத்தஸ்தநா க்ருபா] க்ருபையானது ப்ரஹ்லாதாழ்வானுக்கு ஸ்தந்யபானம் செய்விக்கிறதாக இங்குச் சொன்னது—அவனை அஞ்சக் கொடாதே போஷிக்கின்றதென் னும் தாத்பர்யத்திலேயாம். திருவாய்மொழியில் (3–6–6) *சீற்றத்தோடு அருள் பெற்றவ னடிக்கீழ் புகநின்ற செங்கண்மால்* என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரப்படியில்—

"ஹிரண்யன் பக்கல் சீற்றம் செல்லாநிற்க ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குக் கிட்டலாயிருந்த படி எங்ஙனே? யென்று எம்பெருமானாரைச் சிலர் கேட்க, ஸிம்ஹம் ஆனைமேலே சீறினா லும் குட்டிக்கு முலையுண்ணலாம்படியிருக்குமிறே என்று அருளிச்செய்தார். ஆச்ரித வாத்ஸல்யத்தாலே அவர்கள் விரோதிகள்மேலே சீறின சீற்றமானால் பின்னை அவர்களுக்கு அணையவொண்ணாதபடி யிருக்குமோ? என்று மருளிச்செய்தார்".

என்றுள்ள ஸம்வாதம் இங்கே அநுஸந்தேயம். எம்பெருமானாருளிச் செய்தவிது "இழவு தரியாததோரீற்றுப்பிடி யிளஞ்சியம் தொடர்ந்து முடுகுதலும் குழவியிடைக் காலிட்டெ திர்ந்துபொருங் கோவர்த்தனம்" என்கிற பெரியாழ்வார் திருமொழியை யுட்கொண்டே யாம். இவ்விடங்களில் முலையுண்ணக்கொடுத்தல் பேசப்பட்டிருப்பதை யுட்கொண்டே ஆசிரியர் இங்கு "தத்தஸ்தநா" என்றருளிச்செய்தாரென்றுணர்க.

[ஸரோஜஸத்ருசா த்ருசா வ்யதிவிஷஜ்ய] இந்த அஷ்டகத்தில் முதல் ச்லோகத்தில் "தபநேந்த்வக்நிநயந:" என்றதில் இந்துவும் சேர்ந்திருப்பது ஆச்ரிதர்களுக்கு ஸௌம்யத்வத்

திற்காகவேயிறே. அப்போதலர்ந்த செந்தாமரை போன்ற திருக்கண்ணிலே அருள்வெள்ளமும் காணலாயிருந்ததாயிற்று. "ஸரோஜஸத்ருசா த்ருசா ஸமுதிதாக்ருதிர் த்ருச்யதே" என்று பாடாந்தரம் கூறுவர் சிலர். ... ... .... (7)

त्वयि रक्षति रक्षकैः किमन्यैः त्वयि चारक्षति रक्षकैः किमन्यैः ।
इति निश्चितधीः श्रयामि नित्यं नृहरे वेगवतीतटाश्रयं त्वाम् ॥ ८

த்வயி ரக்ஷதி ரக்ஷகை: கிமந்யை: த்வயி சாரக்ஷதி ரக்ஷகை: கிமந்யை:;
இதி நிச்சிததீ: ச்ரயாமி நித்யம் ந்ருஹரே! வேகவதீதடாச்ரயம் த்வாம். (8)

ஹே! ந்ருஹரே! த்வயி ரக்ஷதி ஸதி அந்யை: ரக்ஷகை: கிம்? த்வயி அரக்ஷதி ஸதிச அந்யை: ரக்ஷகை: கிம்? இதி நிச்சிததீ: அஹம் வேகவதீ தடாச்ரயம் த்வாம் நித்யம் ச்ரயாமி.

வாரீர் சிங்கப்பெருமானே! தேவரீர் ரக்ஷித்தருளுமளவில் இதர ரக்ஷகர்கள் எதுக்கு? தேவரீர் ரக்ஷித்தருளாவிடினும் இதர ரக்ஷகர்கள் எதுக்கு? என்று துணிவுகொண்ட அடியேன் வேகவதிக்கரையில் வாழும் தேவரீரை நிச்சலும் பணிகின்றேன்.

***—ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே நிரூபிதமாகையாலே அதுதன்னை ஸ்திரீகரித்தருளா நின்றுகொண்டு இந்தச்லோகமருளிச்செய்கிறார். ஸர்வேச்வரன் கைவிடாது ரக்ஷித்தருளுமளவில் இதர ரக்ஷகர்களைத் தேடியலைய வேண்டா; அவன் ரக்ஷித்தருளத் திருவுள்ளம் பற்றாதே கைவிட்டானாகில் அப்போதும் ரக்ஷகாந்தராந்வேஷணம் விபலம் என்று திண்ணிய அத்யவஸாயம் கொண்டிருக்கும்படியைத் தெரிவித்தருளினாராயிற்று. அஷ்டபுஜாஷ்டகத்தில் (6) "த்வயி ப்ரவ்ருத்தே மம கிம் ப்ரயாஸை: த்வய்யப்ரவ்ருத்தே மமகிம் ப்ரயாஸை:" என்றருளிச்செய்ததும் இதுவும் பர்யாயமே.

इत्थं स्तुतः सकृदिहाष्टभिरेष पद्यैः श्रीवेङ्कटेशरचितैस्त्रिदशेन्द्रवन्द्यः ।
दुर्दान्त घोर दुरित द्विरदेन्द्र भेदी कामासिकानरहरिर्वितनोतु कामान् ॥ ९

இத்தம் ஸ்துதஸ் ஸக்ருதிஹாஷ்டபிரேஷ பத்யை: ஸ்ரீவேங்கடேசரசிதைஸ் த்ரிதசேந்த்ரவந்த்ய:
துர்தாந்தகோரதுரித த்விரதேந்த்ரபேதீ காமாஸிகாநரஹரிர் விதநோது காமாந்: (9)

இத்தம் இஹ ஸ்ரீவேங்கடேசரசிதை: அஷ்டபி: பத்யை: த்ரிதசேந்த்ரவந்த்ய: துர்தாந்த கோர துரித த்விரதேந்த்ரபேதீ ஏஷ: காமாஸிகா நரஹரி: ஸக்ருத்ஸ் துத: காமாந் விதநோது

இங்ஙனே இங்கு வேங்கடநாதார்யரியற்றிய எட்டுசலோகங்களைக்கொண்டு தேவேந்த்ரஸேவ்யனும் கோரபாப ஹாரியாயிருக்கிற வேளுக்கையாளரியெம்பெருமான் ஒருகால் ஸ்துதிக்கப்பட்டு ஸர்வாபீஷ்ட ஸாதகனுமாக

***தாமருளிச்செய்த இந்த ஸ்துதியைக்கொண்டு புகுவார்க்கு, ஸர்வாபேக்ஷிதங்களும் ஸித்திக்குமென்று பேறு சொல்லித் தலைக்கட்டுகிறார். "ஸக்ருத் ஸ்துத:" என்றது ஆசிரியர் ஒருகால் தோத்திரம் செய்தாரென்று தெரிவிக்கிறபடியன்று. "வேங்கடேசரசிதை: பத்யை: ஸக்ருத் ஸ்துத:" என்றிருக்கையாலே—இதைக் கொண்டு யாரேனும் ஒருகால் துதித்தாலும் அவர்களுக்கு ஸர்வாபீஷ்ட ஸித்தியுமுண்டாகுமென்பதே பொருள். "வேங்கடேச" என்று வ்யஸ்தமாக இருந்தால் இங்ஙனே அர்த்தம் தோன்ற இடமுண்டாகும்;

6

[துர்தாந்த கோர துரித த்விரதேந்த்ர பேதீ] சிங்கத்திற்கு யானையைப் பீறிப் பிளத்தல் தொழிலாயிருக்கும், இந்த வேளுக்கைச் சிங்கம் எந்தயானையைப் பிளக்கின்றதென்றால், ஒருவராலும் தணிக்கவொண்ணாத கோர பாபங்களாகிற யானையைப் பிளந்தொழிக்க வல்லதென்றார். ஸகலாநிஷ்ட நிரஸநபூர்வகமாக ஸர்வாபீஷ்ட ப்ரதானம் செய்தருளி ரக்ஷிக்கவல்லவர் வேளுக்கையாளரிப் பெருமாளென்றாயிற்று. .... .... ... (9)

॥ इति कवितार्किकसिंह सर्वतन्त्रस्वतन्त्र वेदान्ताचार्यकृतिषु कामासिकाष्टकम् समाप्तम् ॥

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியரெழுதிய
வித்வச்சகோரசந்த்ரிகா
வியாக்கியானத்தோடு கூடிய
காமாஸிகாஷ்டகம்
முற்றிற்று.

## நல்வார்த்தை நானூறு—(முன்தொடர்ச்சி)

149. பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரரூபேண ஐவகைப்பட் பட்டிருக்கிற பகவத் ரூபங்களில் பரவ்யூஹ விபவங்கள் மூன்றும் தேசகால விப்ர கர்ஷத்தாலே நம்முடைய வழிபாடுகளுக்கு இலக்காகமாட்டாதவை; அந்தர்யாமி ரூபத்திலும் அர்ச்சாவதார ரூபத்திலுமே வழிபாடுகள் செய்யப் ப்ராப்தம். கர்மாநுஷ்டானம் அந்தர்யாமி ஆராதனமென்றும், கைங்கரியாநுஷ்டானம் அர்ச்சாவதார ஆராதனமென்றும் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்கிறது. கர்மாநுஷ்டானங்களில் அக்நி இந்திரன் ஸோமன் வருணன் ப்ரஜாபதி பசுபதி ப்ருஹஸ்பதி என்கிற பல தேவதை களின் பெயர்கள் பலகாலும் வரும். அந்தத் தேவதைகளை உத்தேசித்துச் செய் வதே கர்மாநுஷ்டான வேஷமாகும். இங்ஙனம் தேவதாந்தரங்களுக்கு ஆராதனமாக அமைகின்ற கருமங்களானவை *இறுக்குமிறை யிறுத்துண்ண எவ்வுலகுக்குந் தன் மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக அத் தெய்வநாயகன் தானே* என்கிற திருவாய்மொழியின்படி அந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியான எம்பெருமானிடமே போய்ச் சேருகின்றன வென்பது வேதாந்திகளின் ஸித்தாந்தம். ஆகவே கர்மாநுஷ்டானம் அந்தர்யாமி ஆராதனமென்னக் குறையில்லை. *ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி விழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்கிறபடியே கைங்கர்யாநுஷ்டானத்திற்கு அர்ச்சாவதாரமே இலக்கு என்பதில் விவரணம் அநபேக்ஷிதம்.

150. தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலையில் *காட்டினான் தெய்வமெங் கும்* என்று கர்மாநுஷ்டான லக்ஷ்யத்தைச் சொல்லி உடனே *நல்லதோரருள் தன்னாலே காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம்* என்று கைங் கர்யாநுஷ்டான லக்ஷ்யத்தையும் சொல்லி, *கேட்டிரேநம்பிமீர்காள் கெருடவாகன னும் நிற்கச் சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே* என்று பின்னடிகளில் அந்தர்யாமி ஆராதனத்திற் காட்டில் அர்ச்சாவதார ஸமாராதனமே பாங்கு என்று காட்டியருளினார். மேலே *மேம் பொருள் போகவிட்டு மெய்ம்மையை மிக வுணர்ந்து—ஆம்பரி சறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கிக், காம்பறத் தலை சிரைத்து உன் கடைத்தலை யிருந்துவாழும், சோம்பரை யுகத்திபோலும் சூழ்புன லரங்கத்தானே* என்ற பாட்டினால் அர்ச்சாவதார கைங்கர்ய ப்ரவணர்களின் பெரு மையையும் அன்னவர்களிடத்து எம்பெருமானுக்குள்ள உவப்பின் மிகுதியையும் உரைத்தார். திருமங்கையாழ்வாரும் *உலகமேத்தும் கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே* என்ற பாசுரத்தை மிகவும் பாவகர்ப்பமாக அருளிச் செய்துள்ளார். இதில் மற்றையார் என்று கழித்தது கருமமே கண்ணாயிருப்பவர்களை. அர்ச்சாவதார ரஸிகர்கள் உஜ்ஜீவிக்கலாகுமே தவிர ஸ்மார்த்த கர்ம கலாபங்களிலே ஊன்றிப் போருமவர்கள் உஜ்ஜீவிக்கப்போகாதென்று வாய்விட்டு அருளிச்செய்திருக்கிறார். அருளிச் செயல் களில் இங்ஙனே பல பாசுரங்கள் உள்ளன. இப்பாசுரங்களையே அல்லும் பகலும் சிந்தை செய்து இவற்றின் அர்த்தங்களிலேயே ஊன்றிப்போரும் ஸதாசார்யர்களின் பரம்பரையில் கருமச்ரத்தை குன்றி கைங்கர்ய ருசியே மிக்கிருக்கின்றதென்றால் இது ப்ராப்தமே. இதில் பொருந்தாமை யொன்றுமில்லை. கர்ம கலாபங்கள் தவிர வேறொன்றையும் பேசாத வேதத்தையே உருப்போட்டு அஃதொன்றே போது போக்காயிருப்பாருடைய பரம்பரையிலே கர்மானுஷ்டானம் வலுத்திருக்கின்ற தென்றால் அதுவும் ப்ராப்தமே. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ஸ்ரீரங்கபாலக கர்மடா:" என்று மிகவழகியவொரு ஸ்ரீஸூக்தி யருளியுள்ளார். இதனால் கோவிலைக் காப்பதே நித்ய கர்மாநுஷ்டானமென்று காட்டியருளினாராயிற்று. ஆனாலும் "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா" என்கிற பகவத் வசனத்தையும் குறிக் கொண்டு அவர்ஜநீயங்களான சில பல நித்ய நைமித்திக கருமங்களை அனுட்டித்துப் போருகிறோம். அதையும் பகவத் கைங்கர்ய ரூபமாகச் செய்துபோருகிறோம்.

151. "ஜாத்யாச்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்" என்பது ஆசார்ய ஹ்ருதய திவ்ய ஸூக்தி. "அத்தாணிச் சேவகத்திலே அதிகரித்தவர்களுக்கு தேவதாந்தர்யாமி விஷயமாய் தச்சரீரபூத தேவதாத்வாரா ததாராதனமாகையாலே ஸாதாரணமாயிருந்துள்ள கர்மம் உறங்குவான் கைப்பண்டம் போலே தன்னடையே நழுவுமென்கை. இத்தால், வர்ணாச்ரமாதி நிஷ்டர்க்கு தத்ததிகாரா நுரூபதர்மமொழிய அநநுகுணமானது த்யாஜ்யதயா கழிக்கப்படுமாபோலே ஸ்வரூப யாதாத்ம்யதர்சிகளானவர்களுக்கு ததநுரூபதர்மமொழிய அநநுரூபமானது த்யாஜ்யமாய்த் தன்னடையே விட்டுக் கழியுமென்றதாயிற்று. இப்படியிருக்கச் செய்தே சிஷ்டர்கள் அநுஷ்டித்துப் போருகிறது—ஸ்வாநுஷ்டானத்தைப் பின்சென்று லோகம் நசிக்கவொண்ணாதென்னும் ஆந்ருசம்ஸ்யத்தாலேயிறே" என்று இவ்விடத்து வியாக்கியானத்திலே மணவாள மாமுநிகள் விசதமாக வருளிச்செய்தருளினர். முமுக்ஷுப்படியில் சரமச்லோக ப்ரகரணத்தில், "இவன்தான் இவை தன்னை நேராக விட்டிலன். கர்மம் கைங்கர்யத்திலே புகும்" என்ற விடத்து வியாக்கியானத்திலும்—"ஸ்வவர்ண ஸ்வாச்ரமோசிதமாக இவன் அநுஷ்டிக்கும் விஹிதகர்மம் ஸாதநபுத்த்யா வன்றிக்கே ஆந்ருசம்ஸ்யத்தாலே பரார்த்தமாக வநுஷ்டிக்கையாலே ஈச்வரனுக்கு மிகவுகப்பாகையாலே தத்ப்ரீதி ஹேதுவாகப் பண்ணும் கைங்கர்யத்திலே அந்தர்ப்பவிக்கும்" என்றருளிச் செய்தார். இத்தகைய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு நன்கு தெளிவது. .... *

152. ஸதாசார்ய ஸம்ப்ரதாயத்தில் ஒரு தடவை நமஸ்கரிப்ப தென்கிற ஆசாரம் நிகழ்ந்துள்ளது. பலமுறை நமஸ்காரம் செய்வதனால் ப்ரத்யவாயமுண்டோ? நமஸ்காரம் என்பது நல்ல காரியமேயொழிய கெட்ட காரியமன்றே. பகவத் பாகவத விஷயங்களில் ஒரு தடவைக்குப் பல தடவையாக நமஸ்கரிப்பதனால் ஸ்வரூபம் நிறம் பெறுமே யல்லது கெட்டுப்போய் விடாதே. ஆகவே ஒரு தடவையே நமஸ்கரிக்க வேணுமென்று ஒரு நிபந்தனை கொள்ளவேண்டுமோ? பல தடவை நமஸ்கரிக்கக் கூடாதென்று சாஸ்த்ரம் மறுக்குமோ? அப்படி சாஸ்த்ரம் மறுத்திருப்பதாகவும் தெரியவில்லையே. தேஹத்தில் சக்தியற்றவர்கள் ஒரு தடவையோ அரை தடவையோ நமஸ்கரிக்கட்டும்; சக்தியும் உத்ஸாஹமுமுள்ளவர்கள் பலமுறை நமஸ்கரித்தால் அதைக் குற்றமாகக் கொள்ளும்படி ஒரு ஸம்ப்ரதாயம் இருக்கத்தகுமோ? என்றிங்ஙனே சங்கைகள் தோன்றக்கூடியவையுள. இதில் நம் ஆசாரியர்களின் திருவுள்ளத்தை விளங்கவுரைக்கிறோம் கேண்மின். எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்களின் போக்கு உச்சாவசமாயிருக்கும். "மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து" என்னுமாபோலே நூற்கடல்களை நன்கு கடைந்து நுண்பொருள்களைக் கடைப்பிடித்துப் பரமாசாரியர்கள் காட்டியருளின அனுஷ்டானமே பரம சாஸ்த்ரம். ஸக்ருத் ப்ரணாம விஷயத்தில் என்ன நுண்பொருள் காணலாகும்? என்னில்; கேண்மின். நமஸ்காரத்தின் ப்ரயோஜனம் என்ன? என்பதை முந்துற முன்னம் விமர்சிப்போம். "நந்த்ருநந்தவ்ய பாவேயம் ந ப்ரயோஜந பூர்வக:, நீசோச்சயோஸ் ஸ்வபாவோயம் நந்த்ருநந்தவ்யதாத்மக:" என்று அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையிலுள்ள வசனத்தை வேதாந்தவாசிரியர் முதலானோர்களும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். பெரியாரைக் கண்டால் சிறியார், தங்களுடைய சிறுமைக்கும் எதிர்த் தலையின் பெருமைக்கும் ப்ரதர்சகமாக நமஸ்காரம் செய்யவேணு மென்றது. வேறொரு ப்ரயோஜநமும் இதற்கில்லை யென்றும் சொல்லிற்று. ஒருகால் தொழுத மாத்திரத்தினால் ஸ்வநிகர்ஷமும் பரோத்கர்ஷமும் ப்ரதர்சிதமாயிற்று. பலகால் தொழவேணு மென்கிற நிர்ப்பந்தத்திற்கு ப்ரஸக்தியில்லை. சாஸ்த்ரங்களில் ஒற்றைக் கையால் நமஸ்கரிப்பது அபசாரம், ஒரு ப்ரதக்ஷிணம் பண்ணுகை அபசாரம் என்று சொல்லியிருப்பது போல ஒரு முறை நமஸ்கரிப்பது அபசாரம் என்று சொல்லப்படவில்லை. "ஏகேந பாணிநா யஸ்து ப்ரணமேத் புருஷோத்தமம், ந்யாய்யஸ்

தஸ்ய கரச்சேத இதி வேதவிதோ விது:'' ''ஏக ஹஸ்த ப்ரணமச்ச ஏகஞ்சாபி ப்ரதக்ஷிணம்'' என்றித்தகைய ப்ரமாணங்களையே ஸ்தோத்ர பாஷ்யாதிகளில் உதாஹரிக்கக் காண்கிறோம். எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் ''ப்ரணம்ய உத்தாயோத்தாய புந:புந: ப்ரணம்ய'' [தொழுது எழுந்தெழுந்து மீண்டு மீண்டும் தொழுது] என்றருளிச்செய்திருக்கும் விஷயத்தில் தெளிவு பிறப்பிக்கிறோம். இங்கு '' ப்ரணம்ய உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய'' என்றது ஓரிடத்திலேயே இருந்து கொண்டு பலமுறை நமஸ்கரிப்பதைச் சொல்லுவதன்று. அந்த வாக்யத்திற்கு முன்னே ''தாராதேவ' என்றருளிச் செய்திருப்பதனால், எம்பெருமானைக் கிட்டுமளவும் காலால் நடந்து செல்லாமல் தெண்டனிட்டுக் கொண்டே வழியைக் கடந்து ஸ்ரீமந் நாராயணனை அணுகுவதாகவே அங்குப் பொருள்படும். இக்காலத்தில் இங்கிலத்தில் அஸக்ருக் ப்ரணமகர்த்தாக்கள் செய்வது போன்ற செயல் அங்கு விவக்ஷிதமன்று. தெண்டன் ஸமர்ப்பித்துக்கொண்டே போய் வழியைக்கடந்து எம்பெருமானைக் கிட்டினபிறகு அங்கு ஒரே தடவை நமஸ்கரிப்பதென்னுமது அவ்விடத்திலேயே அடுத்தடியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ''யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்'' என்று அந்த வாக்யஸமாப்தியுள்ளது காண்க. இங்ஙனல்லாமல் ஓரிடத்திலேயே நின்றுகொண்டு பலமுறை தொழுவதைத்தான் * உத்தாயோத்தாய புந:புந: ப்ரணம்ய என்கிற வாக்யம் சொல்லுகிறதென்று கொண்டாலும் குறை யொன்றுமில்லை. '' ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:'' என்கிற ரீதியிலே நூல்வரம்புக்கு அடங்காத அவ்விபூதியிலே நிகழுமது கொண்டு என்ன ஸாதிக்கலாகும்? இங்நிலத்தில் நம்பூருவாசார்யர்களின் அனுஷ்டானம் ஸக்ருத் ப்ரணமமே யென்பதை அந்த எம்பெருமானார் தாமே ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளபடி பாரீர். அவ்வாசிரியர் திருவாராதனக்ரம மருளிச்செய்கிற நித்யக்ரந்தத்தில்—'' ஆராதநாபிமுகோ பவேதி மூலமந்த்ரேண தண்டவத் ப்ரணம்ய உத்தாய'' என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம் இதுகொண்டு ஸ்ரீவைகுண்டகத்ய ஸ்ரீஸூக்தியின் பொருளை நாம் விவரித்த படியே தெளிய ப்ராப்தம்.

153. ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நத்தில் இருபத்தோராம் ச்லோகத்தில் 'நமோ நம: நமோ நம:' என்று பலகால் அருளிச் செய்திருப்பதை ஸமந்வயப் படுத்தத் திருவுள்ளம் பற்றிய வேதாந்தவாசிரியர் அவ்விடத்து ஸ்தோத்ர பாஷ்யத்தில் ''ப்ரசம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபிச. பயேச விஜயே சைவ பௌநபுந்யமலங்க்ருதி:'' என்கிறவொரு ச்லோகத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். இந்த ச்லோகத்தின் பொருளை விவேகிகள் விமர்சிக்கவேண்டும். ஸ்தோத்ரம் செய்தல், ப்ரதிஜ்ஞை செய்தல், அழுதல், வெருட்டுதல், அச்சந்தோற்றச் சொல்லுதல், வெற்றிதோற்றச் சொல்லுதல் முதலிய ஸந்தர்ப்பங்களில் ஒரு சொல்லையே அடுத்தடுத்துச் சொல்வதானது ஒருவகையான அலங்காரமாகும் என்பது இந்த ச்லோகத்தின் பொருள். உலகத்தில் இதை நாம் நன்றாகக் காண்கிறோம். 'பாம்பு பாம்பு பாம்பு' என்று பலமுறை சொன்னாலும் உள்ளது ஒரு பாம்பே யல்லது பல பாம்புகள் வந்துவிடமாட்டா. *பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்* என்று நூறாயிரந்தடவை சொன்னாலும் 'விஜயீபவ' என்று ஒருகால் சொல்வதற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தமே யன்றோ தேறுவது. அப்படியே, நமோ நம:, தொழுது தொழுது என்று எத்தனை பர்யாயம் சொன்னாலும் அலங்காரமேயாகு மத்தனையென்று வேதாந்தவாசிரியர் தாமே ஸ்பஷ்டமாக நிர்ணயித்தான பின்பு நமக்கென்ன ச்ரமமுள்ளது. பலமுறை நமஸ்கரிப்பதென்கிற ஆசாரத்தில் தூஷணஞ் சொல்வதோ வெறுப்புக்கொள்ளுவதோ விவேகிகளுக்கு உரியதன்று. அது நல்ல காரியமேயல்லது கெட்ட காரியமன்று. அதிகாரானுகுணமாக அதுவும் சாஸ்த்ரார்த்த மாகும். ஸ்ரீவைஷ்ணவஸதாசார்ய பரம்பரையில் ஸக்ருத் ப்ரணமாநுஷ்டானம் நிகழ்ந்துவருவதற்குண்டான உபபத்திகளை நிரூபித்தோமத்தனை. அதிகாரானுரூபமாக

அநுஷ்டான பேதங்கள் எங்குமுண்டாகையாலே, பிறருடை அதிகாரம் வேறுபட்டதாகி அதற்கிணங்கின அநுஷ்டாநம் நிகழ்ந்துவாரா நின்றதென்றால் இதில் பிணக்கு என்? இரண்டு படியாகவுமுள்ள சாஸ்த்ரார்த்தங்களை இருவகை வகுப்பினரையுங்கொண்டு எம்பெருமான் அநுஷ்டிப்பித்துப் போருகிறானென்று உண்மை தெளிந்திருக்க ப்ராப்தம். இங்ஙனே தெளிவு மற்றும்பல விஷயங்களிலு மொக்கும்.

154. "ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்" "அஸத்வா இதமக்ர ஆஸீத்" என்று வெவ்வேறு உபநிஷத்துக்களில் இவ்விரண்டு வாக்கியங்களைக் காண்கிறோம். முன்னே ஸத்துதான் இருந்ததென்று முந்தின வாக்கியம் கூறுகின்றது. முன்னே அஸத்துதானிருந்ததென்று பிந்தின வாக்கியம் கூறுகின்றது. (ஸத்) என்பதற்கு உள்ள பொருள் என்று அர்த்தம்; (அஸத்) என்பதற்கு இல்லாத பொருள் என்று அர்த்தம். இல்லாத பொருள் இருந்ததென்றால் இது எப்படி பொருந்தும்? 'மலடி மகனிருந்தான், ஆகாசத்தாமரை யிருந்தது, முயற்கொம்பு இருந்தது' என்னுமா போலே யன்றோ 'இல்லாத பொருள் இருந்தது' என்கிற இவ்வார்த்தையும். இதை எப்படிப் பொருந்த விடுகிறது? என்று கேள்வி யுண்டாகக்கூடியது. இதற்கு ஒரு விதமாக ஸமாதானம் கூற முன்வரலாம். 'இல்லாத பொருள்தான் முன்னே யிருந்தது' என்பதாக இவ்வாக்கியத்திற்கு அர்த்தமன்று; "இதம் அக்ரே அஸத் ஆஸீத்" என்று யோஜித்து, 'இப்போது காணப்படுகிற இந்த விஸ்தீர்ணமான பிரபஞ்சமெல்லாம் முன்பு சூந்யமாகவே யிருந்தது' என்பதாக அர்த்தம் கொண்டால் பொருந்தாமையொன்றுமில்லை. ஒன்றுமே யில்லாததாக நாம் நெடுநாள் பார்த்தவிடங்களில் கொடி செடி மரங்கள் முளைப்பதும், பெருப் பெருத்த வீடுகள் கட்டப்படுவதும் காண்பதனால் "இதம் அக்ரே அஸத் ஆஸீத்" என்பதில் குறையில்லை யென்று சொல்லிவிடலாம். ஆனாலும் நம்முடைய ஸித்தாந்தத்தில் ஸத், அஸத் என்னுஞ் சொற்களின் பொருளை உள்ளபடி உணரவேண்டும். "ஸதேவ நீயதே வ்யக்திம் அஸதஸ் ஸம்பவ: குத:" என்பது நமது ஸித்தாந்தத்தின் ஸாரமான வார்த்தை. இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளக்கூடியதென்னவென்றால், ஸத் என்ற சொல்லுக்கு ஸ்தூலமான பொருள் என்று அர்த்தம், அஸத் என்கிற சொல்லுக்கு ஸூக்ஷ்மமான பொருள் என்று அர்த்தம். ஸூக்ஷ்மாகாரத்தை யுடைத்தாயிருந்த வஸ்து ஸ்தூலாகாரத்தை யடைகின்றது. இதைத்தான் உத்பத்தியென்று சொல்லுகிறோம். ஸ்தூலாகாரத்தை விட்டு ஸூக்ஷ்மாகாரத்தை யடைந்துவிட்டால் அதைத்தான் விநாச மென்கின்றோம்.

155. வடமொழியில் பஞ்சதா என்று மரணத்திற்குப் பெயர் உள்ளது. இதன் மருமம் என்னவென்பதை உய்த்துணர வேணும். கேண்மின்; நம்முடைய வுடல் ஐந்து பொருள்களா லாக்கப்பட்டது. *மண்ணும் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணு ராக்கை* என்றும் *மஞ்சு சேர் வானெரி நீர் நிலம் காலிவை மயங்கி நின்ற அஞ்சு சேராக்கை* என்றுமுள்ள திருமங்கையாழ்வா ரருளிச் செயலின்படி நிலம் நீர் தீ கால் விசும்பாகிய பஞ்சபூதங்கள் ஒன்று சேர்ந்து சரீரமென வழங்கப்படுகின்றது. ஸூக்ஷ்மாவஸ்தையிலிருந்த பஞ்ச பூதங்கள் ஸ்தூலாவஸ்தையை யடைந்தால் அதுதான் பிறப்பென்றும் ஜன்மமென்றும் சொல்லப்படுகின்றதென்றதாயிற்று. இனி மரணமென்பது யாதெனில், இதுவரை ஸ்தூலாவஸ்தையை யடைந்திருந்த பஞ்சபூதங்கள் அவ்வவஸ்தையை விட்டு மீண்டும் ஸூக்ஷ்மாவஸ்தையை பஜிப்பதுதான் மரணமெனப்படுகின்றது. ஐந்து பூதங்களும் ஒன்றுசேர்ந்திருந்த நிலைமை மாறி ஐந்தாகப் பிரியவுற்ற நிலைமையே மரணமென்று தேறிற்று. இதை யிட்டே மரணத்தைப் பஞ்சதா என்று வழங்குகின்றனர் வடமொழியாளர். இதனால் நாம் தெரிந்துகொண்டது என்ன? இல்லாததொரு வஸ்து உண்டாவதுமில்லை; உள்ளதொரு வஸ்து அறவே அழிந்து போவதுமில்லை. ஓரவஸ்தையை விட்டு மற்றோரவஸ்தையை யடைவதுதான் உத்பத்தி யென்றும் விநாசமென்றும் வழங்கப்பெறுகின்றது. பஞ்ச பூதங்களுக்கு ஸ்தூலாவஸ்தையும் ஸூக்ஷ்மாவஸ்தையும் மாறிமாறி வருகின்

றன. ஸ்தூலாவஸ்தையி லிருக்கும்போது ஸத்து எனப்படுகின்றது. ஸூக்ஷ்மாவஸ்தையில் சேரும்போது அஸத்தெனப்படுகின்றது.

156. பகவத்கீதை இரண்டா மத்யாயத்தில் "ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச'' என்றொரு ச்லோகமுள்ளது. இதில் பிறக்கிற வஸ்துக்களுக்கெல்லாம் ம்ருத்யு நிச்சயமென்றும், ம்ருத்யுவை யடைந்த வஸ்துக்களுக்கெல்லாம் பிறப்பு நிச்சயமென்றும் சொல்லப்படுகிறது. இங்கே சிலர் சங்கிப்பதுண்டு; பிறக்கிற வஸ்துக்களுக்கெல்லாம் ம்ருத்யு நிச்சயமென்றால் இது பொருத்தமே; ம்ருத்யுவை யடைந்த வஸ்துக்களுக்கெல்லாம் பிறப்பு நிச்சயமென்றால் இது பொருந்துமோ? அந்த பகவத் கீதையிலேயே சில அதிகாரிகளைப் பற்றிச் சொல்லும்போது "த்யக்த்வா தேஹம் புநர் ஜன்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!'' என்று புநர்ஜன்ம மில்லையாகச் சொல்லப்படுகின்றதன்றோ. "மாமுபேத்ய து கௌந்தேய! புநர் ஜந்ம ந வித்யதே'' என்றும் சொல்லப்பட்டுள்ளதன்றோ. ஆகவே கீழே யெடுத்துக்காட்டிய கீதா ச்லோகத்தில் "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச'' என்று சொல்லியிருப்பது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கை யேற்படுகிறது. இது ஸர்வாத்மநா அஸ்தாநே தோன்றிய சங்கையாகும். ஜாதம் என்கிற சப்தத்தினால் விவக்ஷிதமான வஸ்து எது? ம்ருதம் என்கிற சப்தத்தினால் விவக்ஷிதமான வஸ்து எது? என்று ஆராய்ந்துணர்ந்தால் இந்த சங்கை யுதிக்க ப்ரஸக்தியே யிராது. ஆத்மாவுக்கு ஜன்மமுமில்லை மரணமுமில்லை. அது ஸ்வருபதோ நித்யமான வஸ்து. ஜன்ம மரணங்கள் சரீரத்திற்கே யுண்டாவன. ஆகவே ஜன்ம மடைந்த தேஹம் நசிப்பதும், நசித்த தேஹம் மீண்டும் ஜன்மமடைவதும் ஸம்பாவிதமே யொழிய அஸம்பாவிதமன்று. ஒருகால் ஸத்து எனப்பட்டு மற்றொருகால் அஸத் தெனப்படுவது ஸதத விகார சீலமான அசித்துககே யாதலால் "ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:'' என்றதும் "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச'' என்றதும் எளிதாகப் பொருந்துமென்க.

157. இராமபிரான் விபீஷணாழ்வானைப் பரிக்ரஹித்த பிறகு கடலைக் கடக்க வேண்டிய உபாயமென்ன வென்பதை நிர்ணயிக்கும் பொறுப்பை விபீஷணாழ்வான் மீது வைத்திட, அவன் தனக்கு சரணாகதியினால் பலன் கைபுகக் கண்டபடியாலே பெருமாளுக்கும் அதுவே சிறந்த வுபாயமாகுமென்றுகருதி ஸமுத்ரசரணாகதியையே உபாயமாகக்கூற, பெருமாள் ஸமுத்ரராஜனை நோக்கி சரணாகதிபண்ணினாரென்பதை வெளியிட்ட வான்மீகி மஹர்ஷியும் கம்பரும் ஸ்ரீராமபிரானை ஒரு கடலாகப் பேசினார்கள். "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:'' என்பது வான்மீகி முனிவரின் வாக்கு. இதில் ப்ரதிசிச்யே என்றதனால் அந்த கடலை நோக்கி மற்றொரு கடல் பள்ளிகொண்டதுபோலும் என்று கருத்துத் தொனிக்கின்றதென்று மஹான்கள் வியாக்கியானம் செய்தார்கள். கம்பரும் வருணனை வழிவேண்டு படலத்தில் "கருணையங்கடல் கிடந்தனன் கருங்கடல் நோக்கி'' என்றார். திருவாய்மொழியில் 6—9—3 பாசுரத்தின் நம்பிள்ளை யீட்டிலும் "ஒரு கடல் ஒரு கடலோடே ஸ்பர்த்தித்துக் கிடந்தாப்போலேயிருக்கை'' என்றருளிச் செய்யப்பட்டுள்ளது' வேதாந்தவாசிரியரும் ரகுவீரகத்யத்தில் "ப்ரதிசயந பூமிகாபூஷிதபயோதி புளிந!''. என்றார். ஆக இப்படிப்பட்ட முன்னோர் மொழிகளுக்குச் சேர எம்பெருமானுக்கும் கடலுக்கும் ஒற்றுமையுள்ளது. இதனாலும் அவன் கடல்வண்ணனவன். திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் அட்டபுயகரப்பதிகத்தில் ஐந்தாம்பாட்டில் கடலுக்கும் எம்பெருமானுக்கும் ஒற்றுமை யுரைத்தனர். அதன் விவரணம் நமது உள்ளுறை பொருள் விளக்கில்.

158. பட்டர் ஸ்ரீரங்கவாஸத்தை யிழந்து சிலவாண்டுகள் திருக்கோட்டியூரில் வஸிக்க நேர்ந்தது. ஸ்ரீரங்கவாஸத்திற்கு ஸௌகரிய மேற்பட்டபிறகு அங்கிருந்து மீண்டு கோயிலுக்கு எழுந்தருளுகையில் ஸ்ரீரங்கராஜஸ்தவமருளிச் செய்தார். தோத்திரத்தின் திருநாமத்திற்குச் சேர முகப்பிலேயே ஸ்ரீரங்கராஜனை ஸ்துதிக்கத்

தொடங்கவில்லை. ஆசார்ய பரம்பராஸ்துதி முன்னாக விழிந்து மங்களாசரணம் செய்து அவையடக்கம் கூறுதலாகிற நைச்சியாநுஸந்தானம் செய்து திருக்காவிரியில் நீராடினமையைப் பேசி, அங்குள்ள சோலைகளின் வாய்ப்பை வருணித்து, திருவரங்க மாநகரின் சிறப்பைப் பாடி, நகரபரிபாலகர்களை வணங்கி அவர்களிடம் அனுமதி பெற்று உள்ளே புகுந்து அங்குள்ள ஸகலசராசரங்களையும் நித்யமுக்தர்களின் திருவுருவமாகப் பாவித்து வணங்கி, கோபுரப்ராகாரங்களோடு கூடின பெரிய கோயிலின் நிலைமையை வருணித்து, திருமங்கையாழ்வார் திருப்பணியான திருமண்டபங்களையும் திருமதில்களையும் தொழுது, ஸன்னிதி த்வாரபாலகர்களை ஸேவித்து, ஆயிரக்கால் மண்டபத்தையும் மங்களாசாஸநம் செய்து, சந்திரபுஷ்கரிணியிற் குடைந்தாடினமை கூறி, அப்புஷ்கரிணியின் கிழக்கே கோயில் கொண்டிருக்கின்ற (மூல மூர்த்திகளான) ஆழ்வார்கள் பதின்மரையும் இறைஞ்சி, பிரணவாகார விமானத்தைக் கைதொழுது, மேட்டழகு சிங்கரை மேவி வணங்கி, சந்திரபுஷ்கரிணிக் கரையில் விளங்குவதும் நம் ஆசாரியர்களுக்குப் புகலிடமாயிருந்ததுமான திருப்புன்னை மரத்தை *ஸ்ரீரங்கராஜகரநம்ரிதேத்யாதியான நாற்பத்தொன்பதாம் சுலோகத்தினால் துதிக்கின்றார். கோவிலுக்குள் ஒரு விருக்ஷமிருந்தால் அதற்கொரு சுலோகமியற்ற வேணுமோவென்று சிலர் நினைக்கக்கூடும். கேண்மின்; திருப்புன்னை அப்படி ஸாமான்யமான விருக்ஷமன்று; அதற்கு இரண்டு சிறப்புக்கள் கூறுகின்றார்; (1) இரவில் திருப்பள்ளியான பிறகு பீங்கு முத்திரையாகி யாவரும் புறப்பட்டுப் போன பின் ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் வெளியே போந்து விலாஸ விஹாரங்கள் செய்தருளும்போது, இத் திருப்புன்னையின் மலர்களைப்பறித்துக் காதணியாகவணிந்து கொள்ள விரும்பிய ஸ்ரீரங்கநாயகி தன் திருக்கைக்கு மலர் எட்டாமையாலே முசித்து நிற்க, அப்போது மலர் கொய்வதற்குப் பாங்காக ஸ்ரீரங்கநாதன் தனது திருக்கையினால் அம்மரத்தின் கிளைகளைத் தாழ்த்த, அவ்வற்றினின்றும் பிராட்டி எளிதாகப் பூக்கொய்துகொள்வள்—என்னுஞ் சிறப்பு முன்னம் கூறப்பட்டது. இது ஆசிரியர் உட்கண்ணாலே கண்ட சிறப்பு. (2) அக்காலத்தில் யாவரும் கட்கண்ணாலே கண்ட சிறப்பு "அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜஸௌரபம்" என்கிற பெரிய விசேஷணத்தினால் தெரிவிக்கப்படுகிறது. அந்த நல்லடிக்காலத்திலே திருப்புன்னையின் கீழேயிருந்துகொண்டு காலை வேளைகளில் திருவாய்மொழி சந்தை சொல்லுவாரும், பிற்பகலிலே பகவத்விஷயார்த்த சர்ச்சை செய்வாருமாயிருப்பர்களாம், அருகேயிருக்கிற புஷ்கரிணியிலிருந்து துளி தண்ணீரெடுத்துக் கொட்டுவாரில்லை; அஜஸ்ரஸஹஸ்ரகீதிஸேகமே தீர்த்ததானமாக வளர்ந்ததாயிற்று. "தீர்த்தங்களாயிரம்" என்று ஆழ்வார்தாமேயருளிச் செய்தாரே. ஸஹஸ்ரகீதியென்று திருவாய்மொழியைச் சொன்னது திவ்யப்ரபந்தங்களுக் கெல்லாமுபலக்ஷணம். .... *

159. உலகில் அபரிமிதமாகக் கற்றவர்களை 'சதுர்தச வித்யாபாரங்கதர்கள்' என்று சொல்லுவதொன்றுண்டு. பதினான்கு வித்யைகளைக் கரைகண்டவர்கள் என்பது இதன் பொருள். பதினான்கு வித்யைகள் எவையென்னில் "அங்காநி வேதாச் சத்வாரோ மீமாம்ஸா ந்யாய விஸ்தர:, புராணம் தர்மசாஸ்த்ரஞ்ச வித்யா ஹ்யேதாச் சதுர்தச." என்கிறபடியே, சிக்ஷா வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்கிற ஆறு அங்கங்களும் நான்கு வேதங்களும், மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்மசாஸ்த்ரம் ஆக இவை யித்தனையுஞ் சேர்ந்து பதினான்கு வித்யைகளெனப்படும். இவ்வளவிலும் பாரங்கதராக ஒருவர் தேறுவது மிகவரிது. ஸ்ரீஹர்ஷ கவி நைஷதகாவியத்தில் "அதீதிபோதசரணப்ரசாரணை: தசாச் சதஸ்ர: ப்ரணயந் நுபாதிபி:, சதுர்தசத்வம் க்ருதவாந் குதஸ் ஸ்வயம் ந வேத்மி வித்யாஸு சதுர்தசஸ்வயம்." என்றொரு சுலோகம் கூறுகின்றார். சதுர்தசவித்யா: என்பதற்குப் பதினான்கு வித்யைகள் என்கிற பொருள் தவிர மற்றொரு பொருளும் கொள்வதற்கிடமுண்டு; சதஸ்ர: தசா: யாஸாம் தா:; சதுர்தசா:. தாத்ருச்யோ வித்யா:-சதுர்தசவித்யா:, நான்கு

தசைகளையடைவிக்கப் பெற்ற வித்யைகள் சதுர்தச வித்யைகளாம்; வித்யைகளுக்கு நான்கு தசைகள் எவை யென்னில்: அதீதிபோதாசரண ப்ரசாரணங்கள். அதீதி யாவது குருமுகமாகக் கற்கை. போதமாவது குரு கற்பித்தவற்றை நன்கு உணருகை. ஆசரணமாவது-கற்றதற்கும் உணர்ந்ததற்கும் பலன் அனுட்டானமாதலால் நல்ல அநுஷ்டானம் கொண்டிருக்கை. ப்ரசாரணமாவது தானனுட்டித்து நிற்குமளவன்றிக்கே "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று ஆழ்வாரருளிச் செய்தபடியும் "ஸ்காலித்யே சாஸிதாரம்" என்று வேதாந்த வாசிரியர் பணித்த படியும் பிறரையும் சிக்ஷாபூர்வமாக அனுட்டிக்கச் செய்தல். ஆக இப்படிப் பட்ட நான்கு தசைகள் பொலியும்படி கல்விகற்க முயலவேண்டும்.

160. ஸ்ரீராமாயணத்தில் தனித்தனி யிடங்களில் தோன்றிய திவ்யதம்பதிகளின் வாக்குக்கள் ஏகரூபமாகக் காண்கின்றன. ஸுந்தரகாண்டத்தில் பிராட்டி இராவணனை நோக்கிக் கூறும்போது "அநந்யா ராகவேணஹம் பாஸ்கரேண ப்ரபா யதா." என்றாள். ப்ரபையானது ப்ரபாவானை விட்டுப் பிரிந்திருக்கமாட்டாது; ப்ரபாவானான ஸூர்யன் ஆகாசத்திலும், ப்ரபை நிலத்திலும் இருப்பதாகக் காணப் பட்டாலும் இது பிரிவாகக் கொள்ளத்தக்கதன்று; இதுபோல, ஸ்ரீராகவன் பஞ்சவடியிலிருப்பதாகவும், நான் இலங்கையிலே யிருப்பதாகவும் தோன்றினாலும் எங்களுக்கு இது பிரிவன்று என்றாள் ஸீதாபிராட்டி. இவள் இங்ஙனே சொன்னது பெருமாளுக்குத் தெரியாது; ஆயினும் அவருடைய திருவாக்கிலும் இவ்விஷயம் இவ்விதமாகவே வெளிவந்துளது. (யுத்தகாண்டத்தில் 121.) "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா." என்கிறார் பெருமாள். *பாஸ்கரேண ப்ரபா யதா* என்கிற உவமை திவ்யதம்பதிகளிருவராலும் ஏகரீதியாகக் கொள்ளப்பட்டிருப்பது நோக்கத் தக்கது. இதையிட்டே "நித்யாநபாயிநீம்—ச்ரியம் தேவீம்" என்று எம்பெருமானாரருளிச் செய்தது. த்வயத்தில் மதுப்பாலும் இதுவே தெரிவிக்கப்படுகிறது.

161. ஸ்வாமி யெம்பெருமானார் சரணாகதிகத்யத்தில் எம்பெருமானுக்கு இட்டருளியிருக்கிற பல ஸம்போதனங்களில் "அநாலோசித விசேஷ அசேஷலோக சரண்ய!" என்பதும் ஒரு ஸம்போதனம். *ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்* என்றும் *ஸர்வலோகசரண்யாய ராகவாய மஹாத்மநே* என்றும் *ஸர்வஸ்ய சரணம் ஸுஹ்ருத்* என்றும் ப்ரஸித்தனாயிருக்கிற எம்பெருமான் வஸிஷ்டசண்டாள விபாகமற யாவர்க்கும் ஒருங்கே புகலிடமாயிருப்பன்; ஒருவரிடத்தில் உத்கர்ஷம் கண்டோ, மற்றொருவரிடத்தில் நிகர்ஷம் கண்டோ, சரண்யத்வத்தில் வாசிவையான் என்கிறது. அநாலோசிதவிசேஷம் யதாததா அசேஷலோக சரண்யனானவனே!

162. எம்பெருமான் ஸாதுபரித்ராணாதி நிமித்தமாக அவதாரங்கள் செய்கிற போதெல்லாம் பிராட்டியும் தவறாது கூடவே அவதாரம் செய்வதாக நூற்கொள்கை. இதை ஸ்ரீ பராசரபகவான் ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் (1—9—142) அனேக ச்லோகங்களாலே விவரித்துள்ளார்! இதை யுட்கொண்டு பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் * அநுஜநுரநுரூப ரூப சேஷ்டா ந யதி ஸமாகம மிந்திரா அகரிஷ்யத், அஸரஸம் அத வா அப்ரியம்பவிஷ்ணு த்ருவமகரிஷ்யத ரங்கராஜ! நர்ம. * என்று இன்சுவைமிக வருளிச் செய்கிறார். ரங்கநாதா! தேவரீர் அவதாரம் செய்தருளும் போதெல்லாம் பெரிய பிராட்டியாரும் தேவரீருடைய திருமேனிக்கும் திருவிளையாடல்களுக்கும் தகுதியான ரூபசேஷ்டிதங்களை ஏற்றுக்கொண்டு திருவவதாரம் பண்ணவே தான் தேவரீருடைய அவதாரங்கள் இனிமைபெறுகின்றன; லக்ஷ்மீ ஸநாதராக வன்றிக்கே ப்ரஹ்மசாரி நாராயணனாக நீர் அவதரித்தீராகில் உம் அவதார கதைகள் காசு பொறாது காணீர் என்றாராயிற்று. இங்ஙனே ஸ்ரீரங்கநாதனை நோக்கிக் கூறினவிதனை இவ் வாசிரியர் தாமே ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கியும் கூறுகின்றார் ஸ்ரீ குணரத்ந கோசத்தில் * யதி மநுஜ திரச்சாம்..........* என்கிறச்லோகத்தினால்.

வ்ருத்தபேதமும் ஸம்போத்யவ்யக்தி பேதமுமொழிய தாத்பர்ய பேதமில்லை. எம்பெருமானுடைய அவதாரம் பிராட்டியின் அவதாரத்தினால் இனிமை பெறுகின்றதென்றால் இதன் கருத்து யாதென்று சிந்திக்க நேரும். கேண்மின். எம்பெருமானுடைய திருவவதாரம் ஸாதுபரித்ராணார்த்தமாகவே யன்றோ; அது நிறைவேறுவது பிராட்டியினுடைய ஸந்நிதியினாலே யாகுமத்தனை. "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீ ஸம்பந்தமநுஸந்தேயம்" என்றும், இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்றுமுள்ள முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்தேயம்.

163. எம்பெருமானை ஆழ்வார்கள் நிதியாகப் பேசி யநுபவித்தார்கள். "நிதியே திருநீர்மலை நித்திலத்தொத்தே" "நிதியினைப் பவளத்தூணை" யென்றும், "வைத்தமாநிதியாம் மதுசூதன்". என்றும் பல பாசுரங்களுள்ளன. ஆழ்வார் திருநகரியைச் சேர்ந்த நவதிருப்பதிகளுள் ஒன்றான திருக்கோளூரில் சயனித்தருளா நின்ற எம்பெருமான் * வைத்தமாநிதி யென்றே திருநாமம் பெற்றிருப்பது ப்ரஸித்தம். இவற்றையெல்லாமடியொற்றிக் கூரத்தாழ்வான் (ஸ்ரீவைகுண்டஸ்தவே) *அந்தர்ஹிதோ நிதிரஸி த்வம் அசேஷபும்ஸாம் லப்யோஸி புண்யபுருஷைரீதரைர் துராப:* என்றருளிச் செய்தார். நிதி ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதபடி மறைந்து கிடக்கச் செய்தேயும் சில பாக்யசாலிகளுக்கு அது எளிதாகிறபடியைக் காணா நின்றோம். அதுபோல எம்பெருமானும் * ஆக்கையுள்ளுமாவியுள்ளுமல்லபுறத்தினுள்ளும் நீக்கமின்றி யெங்கும் நின்றாய் * என்கிறபடியே எங்கும் நிறைந்த பொருளாயிருக்கச் செய்தேயும் தௌர்ப்பாக்ய சாலிகளுக்குப் புலப்படாதவனாயும் இல்லையென்றே சொல்லத்தக்கவனாயு மிருந்து, பிரஹ்லாதாழ்வான் போன்ற பரமபாக்யசாலிகளுக்கு அருமையற அநுபாவ்யனாயிருப்பன்.

164. உலகத்திலுள்ள அதிகாரிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்; 1. ஒன்றுமறியாத மூடர்கள். 2. எல்லாம் நன்கு தெரிந்த விசேஷ வித்துக்கள். 3. ஸ்வல்பம் தெரிந்து எல்லாம் தெரிந்து விட்டதாக நினைத்துக் கொக்கரிக்குமவர்கள் என மூவகை. இவர்களுள், ஒன்று மறியாத மூடர்களை எளிதில் தெளிவிக்க முடியும். ஏனென்றால், அவர்கள் நல்லாரிடத்து நல்லது தெரிந்துகொள்ளவேணுமென்கிற விருப்பமுடையவர்களாதலால். இவர்களுக்கு மேற்பட்டவர்களான விசேஷ வித்துக்களை த்ருப்திபடுத்துவது மிகவும் எளிது. அவர்கள் பரம ரஸிகர்களாகையாலே அன்னவர்களோடு பேசுவது பரம ரஸமாயிருக்கும். சொல்லுகிற விஷயங்களை மிகவும் ரஸமாகவும் எளிதாகவும் அவர்கள் க்ரஹிக்க வல்லவர்களாதலால் அவர்களை ஆராதிப்பது மிகவுமெளிது. மூன்றாமவர்களாகத் தெரிவிக்கப்பட்டவர்களுண்டே, அவர்களைத் தெளிவிக்க ப்ரஹ்மாவாலுமாகாது. எல்லாமறிந்ததாகப் பாவனை கொண்டு எதிலும் குதர்க்கம் செய்வதும், இன்னது சொல்லி யிருக்கிறதென்று உணராமலே தூஷிப்பதும் அன்னவர்களது செயலாதலால் அவர்களுடைய வாழ்நாள் அப்படியே கழியவேண்டியதாகுமேயன்றி, தெளிவுபெற்றுக் களிக்க அவர்கள் பாக்கிய மற்றவர்களே. "அஜ்ஞஸ் ஸுகமாராத்யஸ் ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:, ஜ்ஞாநலவ துர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்றானே.

165. ஸப்தர்ஷி ஸ்தோத்ரமென்று ஏழு சுலோகங்கள் கொண்டவொரு ஸ்துதிநூல் ப்ரஸித்தமாகவுள்ளது; அதில் ஒவ்வொரு ச்லோகத்திலும் நாலாவது பாதம் *ஆர்த்தத்ராணபராயணஸ் ஸ பகவாந் நாராயணோ மே கதி:* என்றே தலைக்கட்டுகின்றது. ப்ரஹ்லாதாழ்வான், கஜேந்திராழ்வான், விபீஷணாழ்வான் போல்வாரான சில வ்யக்தி விசேஷங்களை யெடுத்துக்காட்டி இவர்களுடைய ஆர்த்தியைத் தீர்த்து ரக்ஷித்தருளினபடியைச் சொல்லியுள்ளது. இக்காலத்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணிப் போருவர்கள். ஏதோ சில புராண கதைகளைக்கொண்டு 'அவனை ரக்ஷித்

தார், இவனை ரக்ஷித்தார்' என்று சொல்லிவிடுவதனால் என்னாகும்? இப்போது நம் போல்வார் ஆர்த்தியடைந்து துடிக்கிற காலத்திலே நமக்கு ஒரு ரக்ஷணமும் செய்யக் காண்கின்றிலோமே. நமக்குக் கஷ்டங்கள் விளையும்போது நம்மை நாமே யன்றோ ரக்ஷித்துக் கொள்ளுகிறோம். வியாதி யுண்டானால் மருத்துவனைத் தேடியோடுகிறோம்; * மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா * மருந்தும் பொருளுமமுதமுந் தானே * என்று புகழப்படுகிற எம்பெருமான் வந்து சிகித்ஸை செய்வதாகக் காண்கின்றிலோமே; ஆகவே அவனை * ஆர்த்தத்ராண பராயணனாக நாம் எங்ஙனே அறுதியிட முடியும்? என்று ஆக்ஷேபங்கள் செய்கிறார்கள். இவர்களின் அவிவேகத்தை நாம் எங்ஙனே போக்க முடியும்? ஆனாலும் போக்குகிறோம். அவ்வப்போதுகளில் ஆபத்துக்களில் நின்றும் நாம் விடுபட்டு ரக்ஷைபெறுகிறோமென்பதை ஒப்புக் கொண்டாகவேண்டும். இந்த ரக்ஷணம் நாமே செய்து கொள்வதேயன்றி எம்பெருமான் செய்வதன்று என்று நினைப்பதானது அவிவேகம். அப்பெருமானோ கண்ணுக்குப் புலப்படுகிறவனல்லன். ஏன் புலப்படுவதில்லையென்பதைப் பற்றின விசாரம் தனிப்பட்டது. அதுநிற்க. அவன் கட்கிலியாயிருந்துகொண்டும் தன்னுடைய ரக்ஷணத்தொழிலை விடாதவனாகவேயுள்ளான். ஒரு மஹாப்ரபு ஒருவர்க்கு ஒன்று கொடுக்க நினைத்தால் அதைத் தானே நேராகக் கொடுக்கிறானென்பதில்லை. மந்திரி மூலமாகவோ மற்றொரு சேவகன் மூலமாகவோதான் கொடுக்கக் காண்கிறோம். ஆனாலும் கொடுப்பவன் ப்ரபுதான் என்பதில் ஐயமில்லை. இதுபோலவே நம்முடைய ரக்ஷணத்தை ஸகல ஜகத் ப்ரபுவான ஸ்ரீமந்நாராயணனே செய்து போருகிறான். அப்பெருமான் செய்யும் ரக்ஷணம் அத்வாரகம் ஸத்வாரகம் என்று இருவகைப்படும். தானே ஸாக்ஷாத்தாகச் செய்வது அத்வாரகமெனப்படும். தாய் தந்தையர் மூலமாகவும் மற்றும் சிலர் மூலமாகவும் செய்வது ஸத்வாரகமெனப்படும். "ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்" என்பது பிள்ளை லோகாசாரியருடைய திவ்யஸூக்தி. ப்ரபந்ந பரித்ராணமென்பது சிறியதொரு நூலே; அதை ஸேவித்துத் தெளிவு பெறலாம்.

166. ஸ்ரீராமாயணத்தில் பரதாழ்வான் தசரத சக்ரவர்த்தியின் சரமக்ரியைகளை நிறைவேற்றிவிட்டுச் சித்ரகூடத்தேறப் புறப்பட்டான். புறப்படும்போது மூன்று வகையான அபிப்ராயங்கள் கொண்டிருந்தனன். (1) பெருமாளைத் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருவது. (2) அவர் மீண்டெழுந்தருள வில்லையென்றால் இளையபெருமாளோடு கூடத் தானும் உடன் செல்வது. (3) அதற்கும் அவர் இசையவில்லையென்றால் பிராயோபவேசம்செய்துமுடிவது. என்று இங்ஙனம் மூன்றுவகையான அபிப்ராயங்கள் கொண்டு புறப்பட்டான். இம் மூன்றில் ஒருவகையான கருத்தும் நிறைவேறவில்லை யென்பது ஸ்பஷ்டம். "ஸ காமமநவாப்யைவ" என்று ஸ்பஷ்டமாகவே ஸம்க்ஷேபராமாயணத்தில் சொல்லிற்று. இப்படியிருந்தும் * ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்று, சித்திரகூடத்திலிருந்து வெகு சந்தோஷமாகத் தேரேறித் திரும்பினார் பரதாழ்வான்—என்று சொல்லப்பட்டுள்ளது. இங்கு ஸந்தோஷத்திற்கு ப்ரஸக்தியேது? என்று விமர்சிக்க ப்ராப்தமாகிறது. இங்கு தத்துவம் கேண்மின். ஸ்வரூபத்தில் சேஷத்வம் பாரதந்திரியம் என்று இரண்டு; சேஷத்வத்திற்காட்டில் பாரதந்திரியம் மிகச் சிறந்ததென்பது ப்ரஸித்தம். சொன்னசொல் தவறாது கட்டளைப்படி யொழுகுதல் பாரதந்திரியமென்க. இளையபெருமாள் கூடவே யிருந்து அத்தாணிச் சேவகஞ் செய்தாரென்கிற பெருமையைப் பெற்றவரேயாயினும் பெருமாளுடைய கட்டளைப்படி யொழுகினாரல்லர். காட்டுக்குப் புறப்படும்போது நீ கூட வரவேண்டாமென்றார். அதைக் கேட்கவில்லை. காட்டிலிருந்து ஸுமந்திரர் தேருடன் திரும்பும்போது தேரிலேயே அயோத்திசென்று சேருமாறு வற்புறுத்திக் கூறினார். அதையும் கேட்கவில்லை. ஆகவே இளையபெருமாளுக்குப் பாரதந்திரியத்தில் அந்வயமில்லையென்று

தேறிற்று. பரதாழ்வான் அப்படியல்லாமல் தனக்குப் பாரதந்திரியம் ஸித்தித்ததே! யென்று ஸந்தோஷமடைந்தான். ஆனதுபற்றியே*ஆரூரோஹ ரதம்ஹ்ருஷ்ட:* என்றது.

167. ஸ்ரீ வசநபூஷணத்தில் "விபீஷணனை ராவணன் *குலபாம்ஸந மென்றான்; பெருமாள் இக்ஷ்வாகு வம்சயனாக நினைத்து வார்த்தை யருளிச் செய்தார்" என்பது (228) ஒரு சூர்ணிகை. பாபிஷ்டனான ராவணன் தனக்கு ஹிதோபதேசம் பண்ணின தர்மாத்மாவான ஸ்ரீவிபீஷணாழ்வானை "த்வாம் து திக் குலபாம்ஸநம்" என்று இக்குலத்துக்கு இழுக்காகப் பிறந்த நீ தொலை—என்று வெறுத்துத் தள்ளிவிட்டது ஸ்பஷ்டமாகக் காண்கிறது. அந்த விபீஷணாழ்வானைப் பெருமாள் இக்ஷ்வாகு வம்சயனாக நினைத்து வார்த்தையருளிச் செய்ததாக ஸ்ரீராமாயணத்தில் எங்குத் தெரியவருகின்றதென்று சில ஜிஜ்ஞாஸுக்கள் கேட்பதுண்டு. கேண்மின்; பெருமாள் விபீஷணாழ்வானை அங்கீகரித்தருளின பிறகு அவனோடு அளவளாவும்போது "ஆக்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று கூறியுள்ளார். இங்கு வார்த்தை எப்படியிருக்கவேணுமென்றால், உங்களினத்தவர்களின் பலாபலத்தை எனக்கு உள்ளபடி சொல்லென்றிருக்கவேணும். "த்வதீயாநாம்" என்றோ "யௌஷ்மாகாணாம்" என்றோ பதப்ரயோகமிருந்திருக்கவேணும். அப்படியன்றிக்கே "ராக்ஷஸாநாம்" என்றிருக்கிறது. ராக்ஷஸ ஜாதீயனானவனை நோக்கிப் பேசும்போது இங்ஙனே பதப்ரயோகமிருக்கத் தகாது. இருப்பதனால் விபீஷணாழ்வானை ராக்ஷஸ ஜாதீயனாக நினையாதே திருத்தம்பிமாரோபாதியாக அபிமானித்தமை விளங்கிற்று. மேலே எடுத்துக்காட்டின ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியிலே ராவணன் பரித்யஜித்தமையும், பெருமாள் பரிக்ரஹித்தமையும் சொல்லுகையாலே எம்பெருமான் பக்கலில் ஆநுகூல்ய முண்டாகவே பிராகிருதர்கள் கைவிடுவார்களென்னுமிடமும், பகவான் விரும்பி மேல் விழுந்து பரிக்ரஹிக்கு மென்னுமிடமும் தெரியவருகின்றது.

168. ஸ்ரீ விபீஷணாழ்வான் ராவணனுக்கு எவ்வளவு உபதேசம் செய்தும் பலனொன்றும் காணாமையாலும், அவனால் நிராகரித்துத் தள்ளவும் பட்டதனாலும் இலங்கையை விட்டுத் தொலைத்துப் பெருமாளை சரணமடைவதாகவோடிவந்து "ஸர்வ லோகசரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்" என்று வானரமுதலிகளிடம் விண்ணப்பம் செய்தபோது ஸுக்ரீவன் முதலானவர்கள் அவனிடத்தில் அதிசங்கை கொண்டு அவனை ராமகோஷ்டிக்கு ஆளாக்கிக் கொள்ளக்கூடாதென்று பெருமுயற்சி செய்தார்களென்பதும், பெருமாள் விசாரணை செய்து அங்கீகரிப்பதாக ஸித்தாந்தம் செய்தாரென்பதும் யாவருமறிந்ததே. அவனை அங்கீகரிப்பதாக உறுதிகொண்டு பெருமாள் "விபீஷண! வருக வருக வருக" என்று தாமே அருள்பாடிட்டு அழைத்துக்கொள்ளலாம். அப்படிச் செய்யாமல் அவனைச் சேர்த்துக்கொள்ளவே கூடாதென்று கடுமையாக ஆக்ஷேபித்த ஸுக்ரீவ மஹாராஜரையே விளித்து 'நீர்போய் அழைத்துவாரும்' என்று நியமித்தது எதனால்? தவிரவும் பரமபாகவதோத்தமனான விபீஷணனைப் பற்றி அவமரியாதையாகப் பேசின அந்த ஸுக்ரீவனை "ஹரிச்ரேஷ்ட!" என்று உயர்த்திக் கூறியது எதனால்! என்று கேள்விகேட்க நேரும். இதற்குத் தெரிவிப்பது கேளீர். விபீஷணாழ்வான் தான்வந்து ஆச்ரயிக்கும்போது, கட்டுங்காவலுமில்லாமல் கடற்கரையிலே உலாவிக் கொண்டிருக்கின்ற பெருமாளை நேராக வந்து ஆச்ரயிக்கலாமாயிருக்கச் செய்தேயும், அது முறைமையன்று என்றும், பாகவத புரஸ்காரமாகவே அடிபணிய வேணுமென்றுங் கொண்டு அவன் ஸத்வாரகமாக ஆச்ரயித்தது எப்படி சாஸ்த்ரார்த்தமோ, அப்படியே பெருமாள் ஆச்ரிதர்களை அங்கீகரிக்கிறபோதும் தாமே நேராக அங்கீகரித்து விடாமல் பாகவதபுரஸ்காரமாக அங்கீகரிப்பதும் சாஸ்த்ரார்த்தம். ஆனது பற்றியே ஸ்ரீவசநபூஷணத்தில் (151) "இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடு மென்னுமிடம் அபயப்ரதானத்திலும் காணலாம்" என்றருளிச் செய்தது. இங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு—

> "இச்சேதநன் தானாச்ரயிக்கும்போது புருஷகாரமாக முன்னிடுமவர்களை அவனும் அங்கீகரிக்கும்போது முன்னிடுமென்னுமிடம் திருவடியையும், ஸ்ரீ குஹப் பெருமாளையும் அங்கீகரித்த ஸ்தலங்களில் மாத்ரமன்றிக்கே ஸ்ரீ விபீஷணாழ்வானை யங்கீகரித்த ஸ்தலத்திலுங் காணலாம். எங்ஙனே யென்னில், * ஸோஹம் பருஷிதஸ் தேந..........ராகவம் சரணம் கத: * என்று சரணம் புகுந்து *ஸர்வலோக சரண்யாய.......* என்று நின்ற ஸ்ரீ விபீஷணாழ்வானை அபயப்ரதாநபூர்வகமாக அங்கீகரிக்கிற விடத்தில் *ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட* என்று முதலிகளுக்கெல்லாம் மூலபூதரான மஹாராஜரை முன்னிட்டிறே அங்கீகரித்தது" என்று.

இங்கே ஸுக்ரீவ மஹாராஜரை ஹரிச்ரேஷ்ட! என்று விளித்தது மிகவும் பொருத்தமானதே; விபீஷணாழ்வானைப்பற்றி ஸுக்ரீவ மஹாராஜர் ஆக்ஷேபித்ததானது அவனிடத்தில் மாச்சரியத்தாலன்று; பெருமாளிடத்தில் மங்களாசாஸன பரதையினால் என்பது தத்துவமாதலாலும், இதைப் பெருமாள் நன்குணர்ந்தவராதலாலும் அந்த கௌரவத்தைஇட்டு ஹரிச்ரேஷ்ட! என்றது. ... ... ... *

169. ஆளவந்தாரருளிச் செய்த ஸ்தோத்ர ரத்னத்தில் *மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:* இத்யாதி ச்லோகமானது நம்மாழ்வாருடைய தனியனாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்றது. நம்மாழ்வாரே இதில் தோத்திரம் செய்யப்பட்டிருக்கிறாரென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், இதில் நம்மாழ்வாருடைய திருநாமம் நிர்தேசிக்கப்பட்டிருக்கவில்லை. ஆத்யஸ்ய ந: குலபதே:* என்றதைக்கொண்டு நம்மாழ்வார் விவக்ஷிதர் என்னவேணும். நம்முடைய குருபரம்பரையில் எம்பெருமானே முதல் ஸ்தானத்தில் எழுந்தருளியிருப்பவன். * அஸ்மத் குருப்யோ நம: * என்று ஆரம்பிக்கிற வாக்யகுருபரம்பரையில் * ஸ்ரீதராய நம: * என்றும், * அஸ்மத் தேசிகம்* என்று ஆரம்பிக்கிற சுலோக குருபரம்பரையில் * இந்திராஸஹசரம் நாராயணம் ஸம்ச்ரயே * என்றும் தலைக்கட்டியுள்ளதனால் எம்பெருமான் நம்முடைய குலத்திற்கு ஆத்யபதி—தலைவன் என்பதில் ஐயமில்லையே; *மாதா பிதா யுவதய: * இத்யாதியான பூர்வார்த்தமும் எம்பெருமானிடத்தில் ஸமன்விதமாகக் குறையில்லை; 'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரே யினியாவாரே' என்ற திருவாய்மொழியின்படிக்குத் தாய் தந்தை முதலான ஸகலவித பந்துக்களும் ஸர்வேச்வரனே யாதலால் இத்தச்லோகத்தினால் ஆளவந்தார் ஸர்வேச்வரனையே துதிக்கிறாரென்னலாகாதோ? என்று சங்கிக்கக்கூடும்; (சங்கா பரிகாரம் கேண்மின்) ஆளவந்தார் இந்த சுலோகத்தை வெகு சாதுரியமாக அமைத்தருளியுள்ளார். கடைசி பாதத்தில் தாம் வணங்குவதாகச் சொல்லப்பட்ட அங்க்ரியுகளத்திற்கு வகுலாபிராமம் என்று விசேஷணமிட்டருளி யிருப்பதுதான் வெகு சாதுரியம். திருத்துழாய் மாலை யணிந்த தெய்வமன்று இங்கு விவக்ஷிதம்; மகிழமாலையணிந்த மாறன் சடகோபனென்னும் தெய்வமே விவக்ஷிதமென்று காட்டுதற்கே வகுலாபிராமமென்று விசேஷணமிட்டருளினார். "ஆட்செய் தாழிப்பிரானைச் சேர்ந்தவன் வண்குருகூர் நகரான், நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்று ஆழ்வார்தாமே தம்மை மகிழ்மாலைத் தெய்வமாகச் சொல்லிக்கொண்டார்; வகுளாபரணரென்றும் வகுளபூஷணர் என்றும் நம்மாழ்வார்க்கேயன்றோ ப்ரஸித்தி யுள்ளது. * ஆத்யஸ்ய ந: குலபதே: * என்பதனால் எம்பெருமானே விவக்ஷிதன் என்று கொண்டாலும் குறையில்லை; அவனுடைய வகுளாபிராமமான திருவடி நம்மாழ்வாரேயன்றோ. எம்பெருமானுடைய திருவடிநிலைக்கு ஸ்ரீசடகோபனென்றுதானே திருநாமம். "சேமம் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு, முளவோ பெருமானுனக்கு" என்ற மூதுவர் பாசுரத்தின்படி எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்குமுள்ள அபேதமும் விளங்குமாறு இந்த ச்லோகமருளிச் செய்யப்பட்டிருப்பது முணர்க. முன்னம் மூன்று சுலோகங்

களினல் ஸ்ரீமந் நாதமுநிகளைத் துதித்தவர் அவர்க்கு அடுத்தபடியாகவே நம்மாழ்வாரைத் துதிக்க வேண்டியிருக்க, இடையில் பராசர மஹர்ஷியைத் துதித்து அதன் பிறகு நம்மாழ்வாரைத் துதித்திருப்பதானது ஆழ்வாரையும் எம்பெருமானோடு ஐக்கியமாகக் காட்டுதற்கே யென்பது தத்துவம். ... ... .... *

170. ஆண்டாள் நாச்சியார்திருமொழியில்—“நாணியினியோர் கருமமில்லை நாலயலாரும் அறிந்தொழிந்தார், பாணியா தென்னை மருந்து செய்து பண்டு பண்டாக்க வுறுதிராகில்” என்றருளிச் செய்கிறாள். இங்கே “பண்டு பண்டாக்க” என்று பண்டு என்பதை இரண்டு தடவை பிரயோகம் செய்திருப்பதில் அடங்கியுள்ள விசேஷார்த்தம் மிக அற்புதமானது. இப்பாசுரம் விரஹ தசையில் சொல்லுவது. இந்த விரஹாவஸ்தை நீங்கி ஸம்ச்லேஷ தசை உண்டாகவேணும் என்பதுதானே ஆண்டாளுடைய நோக்கம். அதற்கீடாக “என்னைப் பண்டாக்க” என்றால் போராதோ? ‘பண்டு பண்டாக்க’ என்று இரட்டிக்க வேணுமோ? திருமங்கை யாழ்வாரும் இங்ஙனே அருளிச்செய்திருக்கக் காணுகின்றோம். “கெண்டை யொண்கணும் துயிலும், என்னிறம் பண்டு பண்டுபோ லொக்கும், மிக்க சீர்த் தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே, வண்டு கொண்டுவந்து ஊதுமாகிலே” என்பது பெரிய திருமொழிப் பாசுரம். அதுவும் விரஹ தசையிற் பேசுவதேயாம். அதிலும் பண்டு பண்டு போலென்று இரட்டித்திருப்பதில் ஒரு விசேஷார்த்த மிருக்கவே வேண்டும்; கேண்மின். இப்பாசுரம் விச்லேஷ தசையில் சொல்லுவதாயிருந்தாலும் பண்டையதான ஸம்ச்லேஷ தசை வேண்டுமென்று அபேக்ஷிக்கிற படியன்று. இப்போதைய அவஸ்தைக்கு முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ, அதற்கும் முற்பட்டதான யாதொருஅவஸ்தை யுண்டோ, அவ்வவஸ்தையில் எப்படி யிருந்தேனோ அப்படி என்னை இப்போது ஆக்க விரும்புவீர்களாகில்—என்று விவக்ஷித்து ஆண்டாள் “என்னைப் பண்டு பண்டாக்க வுறுதிராகில்” என்கிறாள். திருமங்கையாழ்வாருடைய விவக்ஷிதமும் இங்ஙனேயாம். இதனை விவரிப்போம்; இப்போதைய அவஸ்தையாவது விரஹாவஸ்தை. இதற்குமுந்திய அவஸ்தையாவது ஸம்ச்லேஷாவஸ்தை. அதற்கும் முந்திய அவஸ்தையாவது—பகவத் விஷய வாஸனையே தெரியாமல் அந்யபரமாகப் போதுபோக்கின காலம்; உண்டியே உடையே உகந்திருந்த காலமென்று கொள்க. அப்போது சரீரம் வாடாமல் வதங்காமல் மாமை குன்றாமல் பசுகு பசுகென்றிருக்குமன்றோ. நிர்விசாரமாக உண்டுடுத்துத் திரியுங் காலத்திலே மேனி நித்யபுஷ்டமாயிருக்கு மென்பதில் ஸந்தேஹமில்லையே. பகவத் விஷயத்தில் வாஸநை பண்ணிப் போந்தது முதலாக “ஸம்யோகா விப்ரயோகாந்தா:” என்றபடி க்ஷணகால ஸம்ச்லேஷமும் சிரகால விச்லேஷமுமாய் வ்யஸநமே அதிகமாகச் செல்லுகையாலே இப்போதைய விரஹாவஸ்தைக்கு முந்தியதான ஸம்ச்லேஷாவஸ்தையிலுள்ள நிறத்தை விரும்புவதில் ரஸமில்லையே. இவ்விடத்தில் “அன்னை முனிவதும் அன்றிலின் குரலீர்வதும், மன்னு மறிகடலார்ப்பதும் வளை சோர்வதும், பொன்னங் கலையல்குல் அன்னமென்னடைப் பூங்குழல், பின்னை மணாளர் திறத்தமாயின பின்னையே” என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தைச் சேர்த்துக் கொள்ளத்தகும். “என்றைக்கு நான் பகவத் விஷயத்தில் ஈடுபடத் தொடங்கினேனோ அன்று முதலாகவேதான் எனக்கு அனர்த்த பரம்பரைகள்” என்பது மேற்குறித்த பாசுரத்தின் கருத்தாதலால் ஸம்ச்லேஷ தசையோடு விச்லேஷ தசையோடு வாசியற இரண்டுமே மெலிவுக்கு உறுப்பு என்பது கொள்கை. ஆகவே ஸம்ச்லேஷ தசைக்கும் முந்தியதான ஸம்ஸாரி தசையாகிற அந்ய பரத்வாவஸ்தையில் நிறத்தை விரும்புவது யுக்தமாதலால் அதனை விரும்புகின்றமை தோன்ற “பண்டு பண்டு” என்றது. இவ்வளவு அர்த்தங்களையும் இரண்டு வாக்கியத்திலே அடக்கி யருளிச் செய்தார் பெரியவாச்சான் பிள்ளை:— “ஸம்ச்லேஷிப்பதற்கு முன்புத்தைப் பூர்த்தி எனக்கு உண்டாகப் பர்த்திகோளாகில்;—கலக்கப் புக்கவன்று தொடங்கி மெலிவுக்

கேயிறே க்ருஷி பண்ணிற்று.'' என்று. "என்னிறம் பண்டு பண்டுபோலொக்கும்'' என்கிற பெரிய திருமொழிப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே சிறிது தெளியக் காட்டியருளினர், அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு ;—"அவன் வாய்புலற்றும் நிறம் அறப் பண்டு போலேயாம். கலக்கையாகிறது பிரிவுக்கு அங்குரமிறே, கலந்து பிரிந்து லாபாலாபங்களறியாதே பூர்ணையாயிருந்தபோதை நிறம்போலேயாம.''

171. ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் யுத்தகாண்டத்தின் தொடக்கத்தில் ஒரு முக்யமான விஷயம் விடுபட்டுப் போயிருப்பதாகச் சில பெரியார் கருதுகின்றனர். அதாவது, ஸுந்தர காண்டத்தில்—அநுமான் இலங்கையிற் புகுந்து அந்நகரின் பல பகுதிகளையும் இடித்துக் கொளுத்திப் பாழாக்கி விட்டமை விரிவாகக் கூறப் பட்டிருக்கின்றது. இலங்கையின் அமைப்பு முழுவதும் அநுமானால் மிகவும் சிதில மாக்கப் பட்டொழிந்த தென்பதில் யாருக்கும் விவாதமிராது. பிறகு ஸ்ரீராமபிரான் இலங்கைக்கு எழுந்தருளிப் போர் புரிந்த காலத்து அங்கே என்ன இருந்தது? ஏற்கெனவே அநுமானுடைய வீரத்திற்கு இலக்காகிச் சுடுகாடாகி யொழிந்த இலங்கையை ஸ்ரீராமபிரான் மறுபடியும் தான் சுடுகாடாக்கினன் என்பதில் பொருத்தமுமில்லை. அதிசயமுமில்லையே. கம்பராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் இராவணன் மந்திரப் படலத்தின் முதலில் சில செய்யுட்கள் அமைந்திருக்குமாறு நோக்கத்தக்கது. அவற்றுள், (முதல் செய்யுள்) "பூவருமயனெடும் புகுந்து பொன்னகர், மூவகையுலகினும் அழகுமுற்றுற, ஏவினவியற்றினன் கணத்திலென்பரால், தேவரு மருள்கொளத் தெய்வத் தச்சனே.'' என்பது. தெய்வத்தச்சன் [மயன், அல்லது விச்வகர்மா] அநுமானால் எரியுண்ட இடங்களைச் செப்பனிட்டு எல்லாவுலகத்திலுமுள்ள ஸகல நகரங்களிற் காட்டிலும் அந்த லங்காபுரி மிகவும் அழகு பெற்றுத் தோன்றுமாறு செய்தான் என்கிறது இச்செய்யுள். அதன் பிறகு. "பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை, நன்னகர் நோக்கினன் நாகம் நோக்கினன், முன்னையி னழகுடைத் தென்று மொய்கழல் மன்னனுமுவந்து தன் முனிவின் மாறினன். (கருத்து.) வீரக்கழலை யணிந்த இராவணன் நவமணிகளு மழுத்தி இபற்றப்பெற்ற அழகுடைய தனது இலங்காபுரியைக் கண்டு வானுலகத்துள்ள நகரத்தையும் பார்த்து, அந்தத் தேவலோகத்து நகரத்திற்காட்டிலும் இப்போது தெய்வத் தச்சன் திருத்திய தனது நகரம் அழகாக இருந்ததோடு எரிப்பதற்கு முன்னேயிருந்ததிற் காட்டிலும் அதிசயித்த அழகு பெற்றுள்ளதென்று கண்டு, எரியுண்டதும் நல்லதாகவேயாயிற்று என்ற கருத்தினால் உவப்படைந்து தன் சீற்றம் மாறப்பெற்றான் என்பதாம். இங்ஙனே தெய்வத்தச்சன் இலங்கையைத் திருத்தினதாகக் கதையிருந்தாலொழிய உபபத்தி இல்லாமையினால் இக்கதை மிக அவசியமேயாகும்; இது வால்மீகி ராமாயணத்தில் காணப்படவில்லை யென்பது ஒரு குறையே. இப்பொருளைக் கொண்ட ஒன்றிரண்டு ச்லோகங்கள் வால்மீகத்திலும் இருந்தனவென்றும் அவை அச்சுப் பதிப்பில் விடுபட்டுப் போயினவென்றும் சில ஓலை ஸ்ரீகோசங்களில் இப்போது கிடைக்கின்றனவென்றும் ஒரு பெரியார் கூறுகின்றார் என்று நமது காதில் விழுகிறது. *ஹாரோபி நார்ப்பிதঃ கண்டே* என்கிற ச்லோகம் பிராட்டியினுடைய திருவாக்காக ஸ்ரீவசநபூஷணத்திலும் அதன் வியாக்கியானத்திலும் உதாஹரிக்கப்பட்டிருந்தும் அது ஸ்ரீராமாயணத்தில் கிடைக்கவில்லை. விடுபட்டுப் போயிற்றென்றே கொள்ளக்கடவது. அந்த ச்லோகமும் ஓலையேட்டில் கிடைத்திருப்பதாக வெளிவந்திருக்கின்றது. .... .... .... *

172. ஸ்ரீராமாயணத்தில் விபீஷண சரணாகதி யென்பது ஒரு சிறந்த ப்ரகரணம். விபீஷணன் ராவணனுக்குப் பலவாறு நன்மைகளை உபதேசித்தும் அவன் கேளாமல் திரஸ்கரித்ததனால் நான்கு அன்பர்களோடுகூட ஆகாயத்திற் கிளம்பி ஸ்ரீராமபிரான் வாநர முதலிகளோடுகூட எழுந்தருளியிருக்குமிடத்திற்கு நேராக வந்து வாநரவீரர்களை நோக்கி 'அடியேனை நீங்கள் இராமபிரானது திருவடிகளுக்கு ஆளாக்கவேணும்' என்று பிரார்த்திக்கையில் அந்த வானர வீரர்கள் அல்

னிடத்தில் மிக்க அதிசங்கை கொண்டு, ராமகோஷ்டிக்கு அவனால் மகத்தான அபாயம் விளையுமென்றெண்ணி அவனைச் சேர்த்துக் கொள்ளவே கூடாதென்று இராமபிரானிடத்தில் பிரபலமாக ஆக்ஷேபங்கள் செய்ததாகவும், சற்றுப்போது விசாரம் நடந்து விபீஷணனைச் சேர்த்துக்கொள்ளவே போகிறேன் என்று இராமபிரான் திருவாய் மலர்ந்தருளி அப்படியே அவனைச் சேர்த்துக் கொண்டதாகவும் வரலாறு. இவ்விதிஹாஸத்தில் நாம் உய்த்துணர வேண்டிய நுட்பங்கள் பலவுண்டு. விபீஷணாழ்வான் வந்து புகும்போது "நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம், ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே." என்று வானர முதலிகளை நோக்கி முறையிடுகின்றான். பெருமாளை ஸர்வலோக சரண்யரென்று விபீஷணன் ஸந்தேஹ லேசமுமின்றித் தெரிந்து கொண்டிருக்கின்றான். இன்னார் இனையாரென்கிற வாசியின்றிக்கே எப்படிப்பட்டவர்களையும் ரக்ஷ்யராகத் திருவுள்ளம் பற்றிக் காத்தருள்பவர் பெருமாள் என்னுமிடத்தை நன்றாகத் தெரிந்துகொண்டே யன்றோ விபீஷணன் 'ஸர்வலோக சரண்யாய' என்று ஓலமிடுகிறான். பெருமாளுடைய உண்மையான ஸ்வபாவத்தை இங்ஙனே தெரிந்து கொண்டிருக்கும்போது விபீஷணன் நேர்கொடு நேரே பெருமாள் திருவடிவாரத்திலே வந்து விழுந்திருக்கலாமே. அப்போது எவ்விதமான ஆக்ஷேப ஸமாதானங்களுக்கும் இடமிராதே. வானர வீரர்கள் பராக்ரமம் காட்டிப் பரிபவித்தவை யொன்றும் அவகாசம் பெற்றிராதே. பெருமாள் கட்டுங் காவலுமாக இருக்கிறாரல்லரே. "உத்பபாத கதாபாணி:" என்று உயரக் கிளம்பின விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதாரவிந்தங்களிலே வந்து விழுந்து 'அந்தோ வடியேற்கு அருளா யுன்னருளே' என்றால் விபீஷணனுடைய அபேக்ஷிதம் மிக எளிதாகத் தலைக்கட்டியிராதோ? வானரவீரர்களை வேண்டுவானேன்? அவர்கள் தடியும் தாம்பு மெடுத்துத் தகர்க்கப் புகுவானேன்? ஒருவிதமான கஷ்டத்திற்கும் அவகாசமில்லாதபடி விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதங்களில் வந்து விழுந்து உய்ந்திருக்கலாமே; ஏன் அங்ஙனம் செய்யவில்லை? என்று ஆராய வேண்டுவது அவசியமல்லவா? ஆராயுமளவில் தேறும் பொருள் என்னென்னில்; கேண்மின். நேராகப் பெருமாள் திருவடிகளிலே புகுவது முறைமையன்று; "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர்பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறார் ஆழ்வார். பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டே பகவான் திருவடிகளிற் புகவேணும். யானைப் பாகனை முன்னிட்டுக் கொண்டல்லது யானையினருகிற் செல்லவொண்ணாது. "தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய்!" என்று பெரிய மதயானையாகக் கூறப்படுகிற பகவானிடத்தே பாகவதர்களாகிற பாகனை முன்னிட்டே புகவேணும். இது சிறந்த சாஸ்த்ரார்த்தம். இதனை அநுஷ்டித்துக் காட்டினன் விபீஷணாழ்வான். ஆனது பற்றியே ஆழ்வானென்ற பட்டமும் அவன் பெற்றான்.

173. முறை தப்பாமே வந்து புகுந்தவிபீஷணன்மீது வானரவீரர்கள் த்ரோஹ புத்தி கொண்டது ஏன்? பரம ஸாத்விகனான விபீஷண னென்பானொருவன் இலங்கையிலுள்ளான் என்பது ஸுக்ரீவ மஹாராஜர்க்குத் தெரியாதா? விபீஷணன் ஸாத்விகனன்றிக்கே அயோக்கியனாகவே யிருக்கவுமாம். இருந்தாலென்ன? அவன் ஒரு நால்வருடன் வந்து புகுந்ததனால் ராமகோஷ்டிக்கு என்ன அவத்யம் விளைந்திடும்! பெருமாளுடைய வீரம் அறியாதவனோ ஸுக்ரீவன். "பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!" என்று பெருமாள் புதிதாக எடுத்துரைக்க வேண்டும் படியோ ஸுக்ரீவனுடைய அறிவிருப்பது. மராமரமேழ் செற்றவன்றோ அறிந்திலனோ? அறிந்திருந்தும் எதற்காக அஞ்சி விபீஷணன்மீது படையெடுக்கப் புகுந்தது? என்று ஆராயவேண்டாவா? ஆராயுமளவில் தேறும் பொருள் இது காண்மின். இதனை நம் வாயால் வெளியிடுவதிற் காட்டிலும் கவிசக்ரவர்த்தியான கம்பர் வாக்கினால் வெளியிடுவது மிக நன்று என நினைக்கிறோம். விபீஷண பரிக்ர

ஹத்தைப் பற்றின ஆக்ஷேப ஸமாதானங்களெல்லாம் முடிந்த பின்பு பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளையிடுவதைக் கம்பர் கூறுகின்றார்:—"ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம், ஈதலே கடப்பாடென்பது. இயம்பினீரென்பால் வைத்த, காத லான், இனிவேறெண்ணக் கடவதென் ? கதிரோன் மைந்த ! கோதிலாதானை நீயே என்வயிற் கொணர்தி யென்றான்." என்று. இதனில், "இயம்பினீர் என்பால்வைத்தகாதலான் இனிவே றெண்ணக்கடவதென்?" என்பது ஸாரமாக நோக்கத்தக்கது. "ஸுக்ரீவா! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் இந்த விபீஷணனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக மறுத்ததற்குக் காரணம் நான் அறியேனோ? விபீஷணனிடத்தில் தோஷமிருப்ப தாக உண்மையில் நினைத்து நீங்கள் மறுத்தவர்களல்லீர்; என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற காதலுண்டே, அது எல்லை கடந்தது. அஸ்தானே அபாய சங்கை பண்ணுவதற்குக் காரணமான அந்தக் காதலின் மிகுதியினால் மருண்டு மறுத்தீர் களத்தனை. இத்தகைய பரமப்ரேமம் நீங்கள் என்பால் கொண்டிருப்பது பற்றிச் சாலவும் உவக்கின்றேன்" என்று விரிவுபட இராகவன் திருவாய் மலர்ந்தருளிய தைக் கம்பர் ஸூத்ரம்போல் அமைத்திருக்கின்ற அழகு என்னே!

174. பகவானிடத்திலே கொண்ட காதல் பாகவத சிகாமணிகளிடத்தே அதிசங்கையை விளைக்குமென்பது திண்ணம். பரதாழ்வான் பரம பக்தி தலையெடுத் துப் பெருமாளைத் திருப்பி யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகச் சித்திரகூடம் நோக்கிப் பரிவாரங்களுடனே வரும்போது குஹப் பெருமாளிடத்தில் நடந்த செய்தி களை அயோத்யா காண்டத்தில் நன்கு அறிவீர்களே; குஹப்பெருமாள் இராமபிரா னுடைய சக்தி விசேஷங்களையும் நன்கறிந்தவர்; பரதாழ்வானுடைய பக்தியின் கனத்தையும் நன்கறிந்தவர். அப்படியிருந்தும், நல்ல ப்ரதிபத்தியோடே வந்த அப் பரதாழ்வானை நோக்கி விபரீதமாகச் சங்கித்து, "அஞ்சனவண்ண னென்னுருயிர் நாயக னளாமே, வஞ்சனையாலரசெய்திய மைந்தரும் வந்தாரே, செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ, உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகனென்றெனை யோதாரோ" "ஆழநெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ, வேழ நெடும்படைகண்டு விலங்கிடும் வில்லாளோ, தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ, ஏழைமை வேடனிறந்தில னென்றெனை யேசாரோ." என்கிறார் கம்பர். இப்படி அதிப்ரவ்ருத்திகள் செய்யப் பார்த்தது எதனாலே? பெருமாள்மீது கொண்ட காதலின் மிகுதியாலன்றோ.

175. உள்ளத்தை உள்ளபடி உணரவல்ல யோகிகளில் தலைவரான பரத்வாஜ மாமுனிவரும் பரதனைப் பார்த்து *கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்ட கர்மண:* [பரதா! உன்னைப்பார்த்தால் எனக்கு மிகவும் அதிசங்கை உண்டாகின்றதே; இராமனுக்கு ஏதோ தீங்கிழைக்கப் போகிறாய் போலே தோன்ற நின்றாயே; அந்தோ! இராமன் ஒருவர்க்கும் ஒரு தீங்கும் இழைப்பவனல்லனே; அன்னவன் திறத்து நீ தீங்கிழைக்க நினைக்கவும் தகாதே; ருஜுவான புத்தியுடன் செல்லு கின்றாயா?] என்று கேட்டிருக்கின்றார். ஒரு யோகி ச்ரேஷ்டர் இப்படி அஸ்தானே கலங்கினாரென்றால் காதலின் கனமே யன்றோ இதற்குக் காரணமாகும். அயர்வறு மமரர்களென்று போற்றப்பட்ட நித்ய ஸூரிகளுக்கும் இங்ஙனே அஸ்தானே அபாய சங்கையுண்டு. "ஹாவு ஹாவு ஹாவு" என்கிற ஸாமகான கோஷத்தைக் கேட்கும் திருவனந்தாழ்வான் அந்த ஸாமகோஷத்தை அஸுர ராக்ஷஸர்களின் கோலாஹல மென்று மருண்டு மயங்கிச் சீறி அழலை உமிழ்கின்றானென்று திருமழிசைப்பிரான் தமது உட்கண்ணினாற் கண்டு பேசுகின்றார்:—"ஆங்கு ஆரவாரம் அது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" என்பது அவ்வாழ்வாருடைய பாசுரம். பட்டரும் ஸ்ரீகுண ரத்ந கோசத்தில்—"ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷாவ்யஸநிபிரபயம் சார்ங்க சக்ராஸி முக்யை: ஆநந்தைகார்ணவம் ஸ்ரீ:! பகவதி! `யுவயோராஹுராஸ்தாநரத்நம்" என்கிறார். பரமபதத்தில் பஞ்சாயுதாழ்வார்களும் ப்ரேமத்தாலே கலங்கிக் காப்பிடு

நிற்பர்களென்கிறது இதில். ஆகவே விபீஷணாழ்வான் திறத்து ஸுக்ரீவ மஹாராஜ ப்ரப்ருதிகள் கலங்கினது கூடும். அது பிரேமத்தின் மிகுதியாலத்தனை என்கிற நுட்பம் இங்கு அறியக் கிடக்கின்றது. வானரவீரர்கள் எவ்வளவுதான் ஆக்ஷேபித்தாலென்ன? அதை இராமபிரான் பொருள் படுத்த வேணுமோ? அவர்களுடைய ஆக்ஷேப மொழிகளைச் செவியேற்காமலே 'வாராய்! விபீஷணா!' என்று சடக்கென அழைத்துக் கொள்ளலாகாதா? 'அங்கதனே! நீ என்ன சொல்லுகிறாய்? சரபனே! நீ என்ன கூறுகின்றாய்? ஜாம்பவானே! நீ என்ன இயம்புகின்றாய்?' என்றிப்படி ஒவ்வொரு குரங்கையும் கேட்டுக்கொண்டு கிடக்கவேணுமோ? அந்தக் காலதாமதம் விபீஷணனுக்குப் புண்ணிற் புளிப்பெய்தாலொக்குமே; பெருமாள் திருவாக்கிலிருந்து என்ன கட்டளை வெளிவரப் புகுகின்றதோ! என்று அவன் குடல் குழம்பி நிற்கும்படியாக வொரு காலக்ஷேபம் செய்தது ஏன்? என்று ஆராயவேண்டும். எம்பெருமான் ஆச்ரித பாரதந்த்ரியமே வடிவெடுத்தவனாகையாலே எதையும் ஸ்வதந்திரனாகச் செய்ய விரும்பாமல் அடியார்களோடு ஒரு மிடறாகக் கலந்து செய்வதே கடமையென்று விரதங் கொண்டவனாதலால், அத்தகைய தனது விரதத்தையும் வழுவாது காட்டுதல் இங்கு அறியத்தக்க சாஸ்த்ரார்த்தம்.

176. விபீஷணாழ்வானுக்காக வானர முதலிகளோடு கூடிக் கலந்து பெருமாள் ஒரு நிர்த்தாரணம் வெளியிடும்போது மிகவும் அற்புதமானவொரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டிருக்கின்றார். அஃது என்னென்னில்:—விபீஷணன் துஷ்டனாகையால் அவன் அங்கீகரிக்கத் தக்கவனல்லன்—என்றார்கள் ஸுக்ரீவாதிகள். விபீஷணன் துஷ்டனல்லனாகையாலே அங்கீகரிக்கத் தகுந்தவனே என்றார் திருவடி. ஆக இங்ஙனே விளைந்த இரண்டு பக்ஷங்களையும் கண்டித்தார் பெருமாள். இரண்டு பக்ஷங்களையும் எங்ஙனே கண்டித்தாராக முடியும்? திருவடியின் பக்ஷத்தைத் தழுவியே யன்றோ விபீஷணனை அங்கீகரித்திருக்கின்றார் என்று கேள்வி பிறக்கும். விஷயம் அதுவன்று. இவனை அங்கீகரிக்கலாகாதென்று ஸுக்ரீவாதிகள் கூறியதைக் கண்டித்தது நிர்விவாதம். திருவடியின் வார்த்தையில்—இவன் 'அதுஷ்டனாகையாலே' என்கிற காரணோக்தியானது பெருமாள் திருவுள்ளத்திற்கு இசையாதது. "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்" என்கிற பெருமாள் திருவாக்கானது திருவடியின் பக்ஷத்திற்கு [ஏகதேசத்திற்கு]க் கண்டனமாக நிற்கின்றது. குற்றவாளரை அங்கீகரிப்பதே நலம் என்கிற பெருமாள் திருவுள்ளம் வெளியாயிற்று. .... .... .... .... .... (*)

177. ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற திவ்ய தேசங்களில் பல திருப்பதிகளின் திருநாமங்கள் நாளடைவில் திரிவுற்று வழங்கிவருகின்றன. இவற்றில் அவிவேகிகள் மயங்கியிருப்பது ஆச்சரியமல்ல. சில விவேகிகளுங்கூட மயங்கியிருப்பதால் தத்துவத்தை விளக்கி வைப்பது நலமென்று தோன்றி இஃது எழுதப்படுகின்றது. மலைநாட்டில் சில திருப்பதிகளின் பெயர்கள் மலையாளர்களின் வழக்கில் சிதைந்தே யிருக்கின்றன. திருவண் பரிசாரத்தைத் திருப்பதிசாரமென்றும், திருவித்துவக்கோடுதன்னை திருமிற்றக் கோடு என்றும், திருவல்லவாழை திருவல்லாய் என்றும், திருவாறன்விளையை ஆரம்முளை என்றும் இப்படி வழங்கி வருகிறார்கள். அவற்றைப்பற்றின திருத்தம் அவ்வளவு அவச்யமன்று. ஆவச்யகமான திருத்தங்களைக் காட்டுகின்றோம். [திருக்கோவலூர்] இது நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டில் ஒன்று. திருக்கோவலூர் என்றே ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள். 'கோபாலபுரம்' என்பது கோவலூர் என்றாயிற்று என்று பெரியார் சொல்லுவர்கள். இதைத் திருக்கோவிலூர் என்றே விவேகிகளுங்கூட வழங்கிவருகிறார்கள். திருக்கோயிலூர் என்று தபால் முத்திரையும் ரைல் ஸ்டேஷன்களில் பிரசுரமும் மலிந்துவிட்டது. அதுவே ஸ்ரீவைஷ்ணவர்களின் நெஞ்சிலும் பெரும்பான்மை ஊறிவிட்டது. திருக்கோவலூர்

என்றே வழங்கவேண்டும். [திருவிந்தளூர்] 'இந்துபுரம்' என்பது இந்தளூர் என்றாயிற்று. இந்தளூர் என்றே ஆழ்வார் பாடல். இதை 'திருவிழந்தூர்' என்றே பெரும்பாலும் வழங்கி வருகிறார்கள். தபால் முத்திரையும் இப்படியே ஏற்பட்டுவிட்டது. "குத்தாலத்தி னருகே யுள்ளது தேரழுந்தூர், மாயவரத்தினருகே யுள்ளது திருவிழந்தூர்" என்றும் சிலர் எழுதிவைத்திருக்கிறார்கள். 'திருவை இழந்தவூர்' என்று பொருள்படும்படி இங்ஙனே வழங்குவது அவசியம் மறக்கவும் மறுக்கவும் தக்கது. திருவிந்தளூர் என்றே சொல்லவேணும். [திருத்தண்கால்] ஸ்ரீவில்லிபுத்தூர் ப்ராந்தத்திலிருக்கின்ற திருத்தண்கால் என்கிற திவ்யதேசம் இவ்விதமாகவே ஆழ்வார் பாடல் பெற்றது. இதை 'திருத்தாங்கல்' என்றே பலரும் வழங்கி வருகிறார்கள். திருத்தண்காலுக்கு வழி எப்படி?' என்று ஒரு பெரியாரை நாம் கேட்க நேர்ந்தபோது, அவர் சிறந்த அத்யாபகராயிருந்தும் 'திருத்தண்கால் காஞ்சீபுரத்திலன்றோ இருக்கிறது. இங்கு ஏது?' என்றார்; 'திருத்தாங்கலுக்கு வழிகேட்கிறீரோ?' என்றும் சொன்னார். காஞ்சிபுரத்தில் ஸ்ரீதீபப்ரகாசன் ஸன்னிதி யென்கிற விளக்கொளி திவ்ய தேசத்திற்கு 'திருத்தண்கா' என்று வ்யபதேசம்; திருத்தண்கால் என்றல்ல. *விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்* என்பது திருநெடுந்தாண்டகப் பாசுரம். *யாம் சென்று காண்டும் தண்காவிலே* என்பது பெரிய திருமொழிப் பாசுரம். தண்கால் வேறு, தண்கா வேறு. தண்காலை தங்காலக்ஷேத்ரம் என்று சிலர் வழங்கிவருவதோடு நில்லாமல் அப்படியே ஒரு புராணமும் கல்பனை செய்திருக்கிறார்கள். இது மிகவும் அருவருக்கத் தக்கது. 'தமிழில் தண்கால் என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் தங்காலமென்றும் ஒப்புக்கொண்டால் என்ன பாதகம்?' என்றும் சிலர் கேட்கிறார்கள். 'திருத்தாங்கல் மான்மியம்' என்றே ஒரு புத்தகம் அச்சிட்டிருப்பது கண்டு மிகவருந்தினோம்.

178. ஸந்தியா வந்தன மந்த்ரம் தர்ப்பண மந்த்ரம் ஸ்தோத்ர பாடங்கள் முதலானவை இளமையில் கற்பிக்கப்படும்போது கற்பிக்கின்றவர்களாலோ கற்கின்றவர்களாலோ அவற்றில் அபத்தங்கள் ஏற்படுகின்றன வென்பதில் ஆச்சரியமில்லை; ஆனால் அந்த அபத்தங்கள் இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும் பெரும்பாலும் ஏகரீதியாயிருந்து வருவது மிகவும் ஆச்சரியத்தைத் தருகின்றது. ஒன்றிரண்டு விஷயங்கள் கேண்மின். திருக்கச்சிநம்பிகள் அருளிச் செய்த தேவராஜாஷ்டகம் ஸகல தேசங்களிலும் பரவியுள்ளது. இதில் *ஸம்ஸார மருகாந்தாரே தூர்வ்யாதி வ்யாக்ரபீஷணே, விஷய க்ஷுத்ரகுல்மாட்யே த்ருஷாபாதப சாலிநி* என்பது ஒரு ச்லோகம். இந்த ச்லோகத்தின் முடிவில் சாலிநி என்றுதானுள்ளது; சாலிநே என்று கிடையாது. அது அநங்விதம். ஆனால் மற்ற மூன்று பாதங்களும் ஏகாராந்தமாகவே யிருப்பதால் இதுவும் ஏகாராந்தமாகவேதான் இருக்கவேணுமென்று கருதியோ வேறு எந்த காரணங் கொண்டோ சாலிநே என்றே சொல்லி வருமவர்களை நம் நாட்டில் பெரும்பாலும் காண்கிறோம். நமது வடநாட்டு யாத்திரையில் பலவூர்களில் பல பேர்கள் வாயில் இந்த ச்லோகம் அநுஸந்திக்கப்படுவதைக் கேட்க நேர்ந்தது; ஒருவர் தப்பாமல் சாலிநே என்றே சொல்லக் கேட்டு வந்தோம். இது ஒரு ஆச்சரியமான விஷயமாகவே யெமக்குத் தோன்றிற்று. மற்றொன்றுங் கேண்மின். ஆளவந்தாருளிச் செய்த காந்தஸ்தே என்று தொடங்குகிற சதுச்ச்லோகியும் உலகமெங்கும் பரவியுள்ளது. இதில் *சாந்தாநந்த* என்கிற நாலாவது ச்லோகத்தில் இரண்டாவது பாதம்—*மூர்த்தம் ப்ரஹ்ம ததோபி தத்ப்ரியதரம்.* என்பது. ஆனால் நமது நாட்டினர் யாவரும் 'தத்ப்ரியதரம்' என்பதை 'யத்ப்ரியதரம்' என்றே [ஒருவர் தப்பாமல்] சொல்லி வருகிறார்கள். இந்த அபத்தம் ஹ்ருஷீகேசம் வரையில் ஒரே ரீதியாயிருப்பதைக் கண்டு வந்தோம். இதைப் பார்த்தால் ஆளவந்தார் திருவாக்கிலேயே "யத்ப்ரியதரம்" என்றுதான் அவதரித்திருக்குமோ! என்று கூட சங்கிக்க வேண்டியதாகிறது. ஆனால் அப்படியில்லை: "தத்ப்ரியதரம்" என்பது தான் அவதரித்த பாடம். எந்த காரணத்தாலோ தப்புப் பாடம் ஸகல தேச வ்யாபியாய் விட்டது. எந்த பதிப்பை யெடுத்துப் பார்த்தாலும் இந்தத் தப்புப் பாடந்தான் காண்கிறது. இனி இது எந்த யுகத்தில் எப்படி மாறப் போகிறது! இங்ஙனே பரவியுள்ள தப்புப் பாடங்கள் ஒன்றா இரண்டா? அபரிமிதமன்றோ? படிப்பில்லாதவர்கள் சொல்லுகிறார்க

ளென்றால் அதில் ஆச்சரியமில்லை. படித்தவர்களுங்கூட ஆராய்ச்சியின்றியே சொல்லி வருவதுதான் ஆச்சரியம். .... .... .... .... (*)

179. நம்முடைய ஸம்பிரதாயத்திலே பகவத் விஷய காலக்ஷேபமென்பது எங்கும் நடப்பது. "தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது-ஈடுமுப்பத் தாறாயிரம்" என்கிற உபதேச ரத்தினமாலைப் பாசுரத்தின்படி வடக்குத் திருவீதிப் பிள்ளை பட்டோலை கொண்டதான ஈடுமுப்பத்தாறாயிரப்படியின் பொருளை குருமுக மாகக் கேட்பதுதான் பகவத்விஷய காலக்ஷேப மெனப்படுவது. இந்த காலக்ஷேப ஸமயத்தில் தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வருவது எங்கும் ஏகரீதியாகக் காண்கிறது. திருவாய்மொழிக்கு வியாக்கியானங்களருளிச் செய்தவர்களான திருக் குருகைப் பிரான் பிள்ளான் முதலான ஆசார்யர்களினுடையவும், முந்துற முன்னம் திருவாய்மொழிக்கு ப்ரவர்த்தகர்களான ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான ஆசார்யர்களி னுடையவும் தனியன்களை யநுஸந்தித்து வருவதில் விசார மொன்றுமில்லை. "சீரார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, எழுதேரார் தமிழ்வேதத் தீடுதனைத், தாருமென வாங்கி முன்னம்பிள்ளை யீயுண்ணி மாதவர்க்குத் தாங்கொடுத்தார், பின்னதனைத்தான். ஆங்கவர்பால் பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை, தாங்கொடுத்தார் தம்மகனார் தங்கையில், பாங்குடனே நாலூர் பிள்ளைக்கவர்தாம் நல்லமகனார்க்கவர்தாம்" என்கிற உபதேச ரத்தினமாலைப் பாசுரங்களின்படி ஈட்டுக்கு ப்ரவர்த்தகர்களாகத் தேறுகிற ஈயுண்ணி மாதவப்பெருமாள் முதலானோருடைய தனியன்களை ஸேவித்து வருவதிலும் விசாரமொன்றில்லை. பிள்ளை லோகாசார்யர், ஆச்சான்பிள்ளை, அழகியமணவாளப் பெருமாள் நாயனார் ஆகிய இம்மூவரின் தனியன்கள் ஸேவிக்கப்பட்டு வருவது எதற்காக வென்று விமர்சிக்கப்பட வேண்டும். * லோகாசார்யாய குரவே * ஸ்ருத் யர்த்த ஸார ஜாதம் * த்ராவிடாம்நாய ஹ்ருதயம் * என்கிற இம்மூன்று தனியன் களும் நியமேந ஸேவிக்கப்பட்டு வருகின்றனவன்றோ. இதற்கு நியாமகம் கேண்மின். திருவாய்மொழிக்கும் ஈட்டுக்கும் காப்பாக ஸ்ரீவசந பூஷணாதிகளையும் ஆசார்ய ஹ்ருதயாதிகளையும் அருளிச்செய்த உபகார ஸ்ம்ருதிக்காகவே பிள்ளைலோகாசார்ய ருடையவும் அவர் திருத்தம்பியாருடையவும் தனியன்களை யநுஸந்திப்பது. மணவாள மாமுனிக ளொருவரே அடிக்கடி எடுத்தாளும் பரந்த ரஹஸ்யத்தை யருளிச் செய்ததற்காகவே ஆச்சான்பிள்ளை தனியனை யநுஸந்திப்பது. பரந்த ரஹஸ்யத்தைப் பெரியவாச்சான் பிள்ளையே அருளிச் செய்திருந்தால் ஆச்சான் பிள்ளை தனியன் இவ்வநுஸந்தான பரம்பரையில் சேர்வதற்கு ப்ரஸக்தியேயிராது. பரந்த ரஹஸ்ய மொழிந்த வேறு சில க்ரந்தங்களை யருளிச் செய்ததற்காகவானாலோ வென்னில். அது சொல்ல வொண்ணாது. அப்படிப்பட்ட க்ரந்த மேதுமில்லாமையினாலே.

180. உபதேசரத்தினமாலையில் மணவாள மாமுனிகள் சிலவாசார்யர்களின் திருநாமங்களை புநঃ புநঃ நிர்தேசித்தருளுகிறார். இந்த நிர்தேசங்களில் ஒருவாசி நுட்பமாக உய்த்துணர வேண்டியதாயுள்ளது. அதாவதென்னென்னில், திருக் குருகைப்பிரான் பிள்ளான். பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளச் சீயர் ஆகிய இந்த ஆசாரியர்கள் மூவரை யெடுத்துக் கொள்வோம். திருக்குருகைப்பிரான் பிள்ளானை ஒரு பாசுரத்தில் இங்ஙனே முழுப் பெயராலருளிச் செய்து, மற்ற இரு பாசுரங்களில் பிள்ளா னென்றே அருளிச் செய்கிறார். அழகிய மணவாளச்சீயரை ஒரு பாசுரத்தில் இங்ஙனே முழுப் பெயராலருளிச் செய்து மற்ற இரு பாசுரங்களில் மணவாள யோகி யென்றும் மன்னுமணவாள முனியென்றும் சுருங்க வருளிச் செய்கிறார். பெரியவாச்சான்பிள்ளையை மூன்றுபாசுரங்களில் ப்ரஸ்தாவித்தருளுகிறார். மேலே விவரித்த கணக்கிலே அவர் திருநாமத்தை ஒரு பாசுரத்திலும் சுருக்காமல் [ஆச்சான்பிள்ளை யென்று சுருக்கி யருளிச் செய்யாமல்] மூன்றிலும் பெரியவாச்சான் பிள்ளை யென்றே யருளிச் செய்கிறார். ஏன்? சுருக்கினால் வ்யக்தி மாறுபட்டுவிடு மென்று. செய்யுளிலேயே சுருக்காதவர் வசனத்தில் சுருக்க ப்ரஸக்தியேகிடையாது. ஆகவே மணவாள மாமுனிகள் திருவாக்கில் ஆச்சான்பிள்ளையென வந்தவர் பெரிய வாச்சான் பிள்ளையல்ல ரென்பதை மிக வெளிதாக வுணர்வர்கள் விவேகிகள்.

(தொடரும்.)

ஸ்ரீ:

# பரந்த ரஹஸ்யம் பிறந்த ரஹஸ்யம்

# தீவிரமான சபதமொன்று.

நம்முடைய ஸம்பிரதாயத்தில் பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்த க்ரந்தங்கள் ஒன்றிரண்டல்ல. பல பல வுள்ளன. எந்த க்ரந்தங்களைப் பற்றி விவாதமுள்ளதோ, (அதாவது) ஆச்சான் பிள்ளை ஸாதித்ததா? பெரிய வாச்சான் பிள்ளை ஸாதித்ததா? என்கிற சச்சரவு உள்ளதோ, அந்த க்ரந்தங்களை=பரந்த ரஹஸ்யம், மாணிக்க மாலை முதலானவைகளை அறவே விட்டிடுவோம். எந்த எந்த க்ரந்தங்களைப் பெரிய வாச்சான் பிள்ளை ஸாதித்ததாக வைணவ வுலகம் முழுவதும் நிர்விவாதமாக இசைந்திருக்கின்றதோ, அந்த க்ரந்தங்களில் ஒரு க்ரந்தத்தைப் பற்றியாவது ஆச்சான் பிள்ளை ஸாதித்ததாக மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியுளதா? உளதாயின், இரண்டிடம் வேண்டாம், மூன்றிடம் வேண்டாம்; ஒரே ஒரு இடம் காட்டினுல் போதும். காட்டிவிட்டால், மணவாள மாமுனிகளின் வியாக்சியான நூல்களில் ஆச்சான் பிள்ளையென வருமிடங்களெல்லாம்—ஒன்று தப்பாமல் பெரிய வாச்சான் பிள்ளையையே குறிக்கின்றன என்றிசைந்து நிற்பதோடல்லாமல் அப்படி காட்டின க்ஷணம் முதலாக நாம் எழுத்துக் கருவியையோ புத்தகத்தையோ யாவச்சரீரபாதம் கையால் தோடுவதில்லை, எங்கும் உபந்யாஸமென்று வாய் திறப்பதுமில்லை—என்று தீவிரமான சபதம் செய்து இஃது எழுதுகின்றோம்.

மணவாள மாமுனிகளொருவருடைய ஸ்ரீஸூக்தியைப் பற்றி நாம் கேட்கிறோமே யல்லாது வேறு எந்த ஆசிரியருடைய உக்தியையும் கேட்கவில்லை. விசதவாக் சிகாமணிக ளென்கிற பட்டத்தை நாவலம் பெரிய தீவினில் இன்னொருவர் பெறவில்லை, பெறவும் முடி யாது. மயங்கவைத்தல், மாறுபட வுரைத்தல் முதலிய குற்றங் குறைகளுக்கு ஈஷத்தும்இடமில் லாதபடி வியாக்கியானங்கள் ஸாதிக்கவல்லவர் மணவாள மாமுனிகளொருவரே! ஒருவரே! ஒருவரே. நம்பிள்ளையல்லர், பெரிய வாச்சான் பிள்ளையல்லர், வடக்குத் திருவீதிப் பிள்ளையு மல்லர் என்று சபதம் செய்வோம். மாமுனிகளின் வியாக்சியானங்களை ஆழ்ந்து பரிசீலனை செய்வாரில்லை. அவர்தாம் ஆர்த்தியில் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்" என்று ஸாதித்தபடி தம்முடைய திவ்ய க்ரந்தங்களில் 28 ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளை யுதாஹரித்தருளியுள்ளார். ஆள வந்தார், எம்பெருமானார் ஆழ்வான் எம்பார் முதலிய ஸுப்ரஸித்த ஆசார்யர்களைத் தவிர மற்றை யாசாரியர்களை ப்ரஸ்தாவிக்கும் போது பின்புள்ளவர்களுக்கு ஸந்தேஹ விபர்யயங்கள் ஜனிக்குமேன்றெண்ணி, ஒரு ஸந்தேஹமும் ஒரு விபர்யயமும் ஜனிக்க இடமில்லாதபடி ஸாதித்திருக்குமழகு அநுபவரஸிகர்களுக்கே கோசரமானது. ஒன்றே காண்மின். பட்ட ருடைய ஸ்ரீஸூக்திகளை மாமுனிகள் தமது திவ்யக்ரந்தங்களில் 14 இடங்களில் எடுத்தருளு கிறார். எங்கும் பட்டர் பட்டர் என்றே ஸாதிக்கிறார். அப்படிப்பட்டவர் ஓரிடத்தில் மட்டும் பெரிய பட்டர் என்று அவரையே நிர்தேசித்தருளுகிறார். எங்கே யென்னில், ஸ்ரீவசந பூஷணத்தில் (5) "இதிஹாஸச்ரேஷ்டமான". இத்யாதி சூர்ணையின் வியாக்சியானத்திலே காண்க. 13 இடங்களில் பட்டர் என்றே ஸாதித்தவர் இவ்வோரிடத்தில் மட்டும் பெரிய பட்டரென்று எதக்கு ஸாதித்தார்? என்று விமர்சகர்கள் விமர்சிக்கக் கடமைப்பட்டவர்கள். உண்மை கேண்மின். அங்கு ஸ்ரீராமாயணத்திற்கு இதிஹாஸ ச்ரேஷ்டத்வத்தை நிரூபிப்பதும் ஸ்ரீ ராமாயணம் போலவே மஹாபாரதமும் ப்ரபல ப்ரமாண மென்று நிரூபிப்பதும் ப்ராப்தமாகவுள்ளது. இவ்விரண்டுக்கும் நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டருடைய ஸம் வாதத்தைக் காட்டியருளினர் மாமுனிகள். அவ்விடத்திலேயே பட்டருடைய ஸூக்தி ஸம்வாதமும் காட்டத் திருவுள்ளம் பற்றினர். வெறுமனே பட்டர் என்றால் பூர்வ ப்ரஸ்துத

## தீவிரமான சபதமொன்று

ரான நடுவில்திருவீதிப் பிள்ளை பட்டரை விவக்ஷிதராகச் சிலர் கொள்ளக்கூடுமேன் றெண்ணி அதற்கு இடமறும்படி பெரிய பட்டர் என்று விசேஷித்தருளினர். மற்ற 13 இடங்களில் இந்த சங்கடமில்லாமையினாலேயே வெறுமனே பட்டரேன்றருளிச் செய்தார். இங்கு "ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யோபோத்காதத்திலே" என்று ஸாதித்திருந்துங்கூட அந்த நடுவில்பட்டரும் ஸஹஸ்ரநாம பாஷ்யமொன்று ஸாதித்திருக்கிறார் போலும் என்று சங்கிக் கவும் அவகாசமில்லாதபடி பெரிய பட்டரேன்றார். இதே ரீதியில் தத்வத்ரயம் (அசித். 103) "பெரிய வாச்சான் பிள்ளையும் இப்படியிறே அருளிச் செய்தது" என்று மாமுனிகள் அருளி யிருப்பதை ஆழ்ந்து நோக்கவேண்டா, மேலெழ நோக்கினாலும் போதும். அந்த ஸ்தலத்தில் ஆச்சான் பிள்ளையின் ப்ரஸ்தாவம் அதிகமாக வந்திருக்கையாலே அவரை வ்யாவர்த்திப்பதற் காகவேயாயிற்று பெரிய வாச்சான் பிள்ளை யென்றருளிச் செய்தது.

மணவாள மாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களுக்குள் பெரிய வாச்சான் பிள்ளையேன் கிற நிர்தேசம் உபதேச ரத்தின மாலையில் மூன்றிடங்களிலும், ரஹஸ்ய வ்யாக்யானங்கள் நான் கில் இவ்வோரிடத்திலுமாக நான்கிடங்களில் மட்டுமேயுள்ளது. அருளிச்செயல் வியாக்கியா னங்களை உதாஹரித்தருளுமிடங்களில் நியமேந பூருவர்கள் என்றே யுள்ளது. ஆக, மாமுனிகள் திருவாக்கில் ஆச்சான் பிள்ளையென வந்திருக்குமிருபத்திரண்டிடங்களில் ஓரிடங்கூட பெரிய வாச்சான் பிள்ளையை நினைத்ததன்று என்பது கல்வெட்டாயிற்று.

தத்வத்ரய விவரணம், பரந்த ரஹஸ்யம், மாணிக்கமாலை, ஜிதந்தா வியாக்கியானம் கத்ய வ்யாக்கியானம் ஆக ஐந்து க்ரந்தங்களைப் பெரியவாச்சான்பிள்ளையின்கிருதியல்லவென்றும் நன்கு ஸ்தாபித்துத் தருமவை மாமுனிகளின் விசதவாங் மணிகளேன்பது அசைக்க முடியாதது.

## மிக முக்கியமான வார்த்தை

மணவாள மாமுனிகளின் திருவாக்கில் "நடுவில்திருவீதிப் பிள்ளை பட்டரும்" ஆச்சான் பிள்ளையும்" என்னும் வார்த்தை மூன்றிடங்களிலுள்ளது. "ஆச்சான் பிள்ளையும் நடுவில்திருவீதிப் பிள்ளை பட்டரும்" என்று ஓரிடத்திலுங்கூட கிடையாது. பரிமளத்தோடே அங்குரிக்கும் திருத்துழாய் போலே நம்பிள்ளை திருவடிகளில் ப்ராவண்யமே இயல்வாக அவ தரித்த பெரிய வாச்சான் பிள்ளையை; நெடுகோள் நம்பிள்ளை திறத்தில் வெறுப்புக் கொண்டிருந்த கதாசித் ப்ராவண்யங் கொண்டு வந்து சேர்ந்த நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர்க்குப் பிறகு மாமுனிகள் நிர்தேசித்தாரேன்பது-மஹத்தான ஸாஹஸம். இதற்காகவே மாமுனிகள் க்ரமம் தவறுதவர் என்கிற விஷயத்தை நமது பழைய நூல்களில் நாமெடுத்தது. அதற்கு வ்யபிசாரம் சொல்லப் புக்கவர்கள் நிரஸ்தர்களாவதற்கு மாமுனிகள் க்ரமம் தவறின் விடம் அணுவளவும் கிடையாதேன்ற சிலாலிகிதமாக நிரூபிக்கிறோம் அடுத்தபடியாக. அசைக்கவொண்ணாத அந்த நிருபணத்தினால்

**மணவாள மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென்று ஸாதிக்கும்**
**வ்யக்தி பெரியவாச்சான் பிள்ளையல்லர், அவருடைய திருமகனாரே**

என்றறுதியிடுவதற்கு வேறு எந்த ப்ரமாணமும் வேண்டா; "நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரும் ஆச்சான் பிள்ளையும்" என்கிற வசனவ்யக்தியே பர்யாப்தம் என்று நிஷ்கர்ஷிக்கத் தட்டில்லை.

## மணவாள மாமுனிகளின் திவ்ய ஸூக்தி க்ரமம்

*பிள்ளை லோகாசாரியர் முதலான மற்ற ஆசாரியர்கள் தங்கள் திவ்ய க்ரந்தங் களிலே ப்ரமாணங்களையோ ப்ரமாதாக்களையோ உதாஹரிக்க நேர்ந்தால் க்ரம விவக்ஷை யில்லாமலே உதாஹரிப்பதுண்டு. மணவாள மாமுனிகளின் திவ்ய ஸூக்திகளில் ஓரிடத் திலும் க்ரம விபர்யாஸம் அணுவளவும் காட்ட முடியாது. ஆழ்ந்து நோக்க சக்தியற்றவர் களுக்கு மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலும் க்ரமவிவக்ஷையில்லாமல் ஸாதிக்கிற புடை களுண்டு என்று தோன்றும். இதில் தெளிவுபட வுரைக்கின்றோம்.*

முமுக்ஷுப்படியில் "இத்தை வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினர்கள்" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்காட்டி வரும்போது, நம்மாழ்வார், பெரியாழ்வார், குலசேகரப் பெருமாள், திருமழிசைப்பிரான், திருமங்கையாழ்வார், முதலாழ்வார்கள் என்று க்ரமவிவக்ஷையில்லாமல் எடுத்திருக்கிறார் என்று சிலர்க்குத் தோற்றியிருப்பது தவறு. உபதேச ரத்தின மாலையில் "பொய்கையார் பூதத்தார் பேயார்" என்னும் பாசுரத்தினால் ஆழ்வார்களின் அவதாரக்ரமத்தைச் செவ்வனே அருளிச்செய்துவிட்டு அவர்களுக்கு நாள்பாட்டுக்கள் அருளிச்செய்யும்போது இந்த க்ரமத்தை விட்டு முதலாழ்வார்களை மட்டும் முதலிலே பேசி, பிறகு திருமங்கையாழ்வார், திருப்பாணாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமழிசையாழ்வார் என்று ஒரு க்ரமத்திலும் சேராதபடி அக்ரமமாகவும் அதிக்ரமமாகவும் பேசியிருக்கிறார் என்று சிலர் சொல்லுவது போன்றதேயாமிதுவும். முதன்மையையிட்டு முதலாழ்வார்களை முன்னம் பேசி, பிறகு மாதவரிசையாக, ஐப்பசிக் கடுத்தது கார்த்திகை, அதற்கடுத்தது மார்கழி, அதற்கடுத்தது தை... என்று இங்ஙனே மாஸக்ரமத்தை விவக்ஷித்து, கார்த்திகை மாதத்திலவதரித்த திருமங்கையாழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் பேசி, அதன் பிறகு மார்கழி மாதத்திலவதரித்த தொண்டரடிப் பொடியாழ்வாரைப் பேசி, அதன் பிறகு தை மாதத்திலவதரித்த திருமழிசைப்பிரானைப் பேசி .. இவ்வடைவிலேயே மேலும் பேசியருளினர். இது மாமுனிகள் திருவுள்ளம் பற்றின க்ரமம்.

முமுக்ஷுப்படியில் "இத்தை ஆழ்வார்களும் விரும்பினர்கள்" என்றவிடத்து ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்காட்டி வரும்போதும் ஒரு க்ரமத்தை மாமுனிகள் திருவுள்ளம் பற்றி அந்த க்ரமம் வழுவாமலே அருளிச் செய்து போருகிறார். (அதாவது) ப்ரபந்ந ஜந கூடஸ்தரான நம்மாழ்வார் ஸ்ரீ ஸூக்தியை முன்னமெடுத்துக் காட்டிவிட்டு பிறகு முதலாயிரம், இரண்டாவதாயிரம், மூன்றாவதாயிரம் என்ற அடைவிலே சென்று முதலாயிரத்திலுள்ள ப்ரபந்தங்களுக்கு வக்தாக்களான பெரியாழ்வார் குலசேகராழ்வார் திருமழிசையாழ்வார் என்னுமிவர்களின் ஸ்ரீஸூக்திகளைக் காட்டி, பிறகு இரண்டாமாயிரத்திற்கு வக்தாவான கலியனுடைய ஸ்ரீஸூக்திகளைக் காட்டி, பிறகு மூன்றாமாயிரமான இயற்பாவிலுள்ள திருவந்தாதிகளுக்கு வக்தாக்களான முதலாழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைக் காட்டி, மேலே காட்டவேண்டியதில்லாமையாலே அவ்வளவோடே தலைக் கட்டினார். இங்கே திருமழிசைப்பிரானுடைய ஸ்ரீ ஸூக்திகளைக் காட்டுமிடத்தில் அவருடைய இரண்டு ப்ரபந்தங்களில் முந்தினது நான்முகன் திருவந்தாதியாகையாலே அது மூன்றாவதாயிரத்திற்சேர்ந்ததாயிருந்தாலுங்கூட பௌர்வாபர்ய க்ரமம் மாறுடக் கூடாதென்றே அதை முன்னமெடுத்துப் பின்னையே திருச்சந்த விருத்தப் பாசுரத்தை யெடுத்தருளினார். ஆகவே இங்கு மாமுனிகள க்ரமம் தவறியது சிறிதுமில்லை. இங்கே நாம் நிரூபித்தவிது சிரமப்பட்டு ஆரோபித்ததன்று என்பதை நிபுணர்கள் நிலையிடுவார்கள்.

இனி தத்வத்ரய சித்ப்ரகரண வியாக்கியானத்தில் (4. ஆத்ம ஸ்வரூபம்) இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்திலே— "இவருக்கு இங்கு விவக்ஷிதம் ஜ்ஞானமாகவேணும்; தத்வ சேகரத்தில் ஜ்ஞாநாதிவைலக்ஷண்யம் அருளிச் செய்கிறவிடத்தில் அப்படியருளிச் செய்கையாலே, 'தேஹேந்த்ரியமந: ப்ராணதீப்ய:' என்றிறே ஆளவந்தாருமருளிச் செய்தது" என்றவிடத்தில் பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்தி ஸம்வாதத்தை முன்னம் காட்டிவிட்டுப் பிறகு ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்தியைக் காட்டினதும் க்ரம விபர்யாஸமாகாது. தத்வத்ரயமருளிச் செய்தவரும் தத்வ சேகர மருளிச் செய்தவரும் ஒருவரேயாதலால் தத்வசேகர ஸூக்தி ஸம்வாதத்தை முன்னம் காட்டினது மிகவும் யுக்தமே. "இவர் தாமருளிச் செய்த பரந்த படியிலும் ஆச்சான் பிள்ளை யருளிச் செய்த பரந்தரஹஸ்யத்திலும்" என்ற ஸ்ரீஸூக்தியானது முந்தின ஸ்ரீஸூக்தி போன்றதாகாது. ஏனென்னில், ஊன்றிக் கேண்மின், தத்வத்ரய வியாக்கியானத்தில் தத்வசேகர ஸூக்தி ஸம்வாதத்தை மாமுனிகள் எடுத்துக் காட்டினதானது மூலத்தின் பொருளை நிஸ்ஸம்சயமாக நிர்ணயிப்பதற்காகவே யாயிற்று. (தத்வத்ரயம 4.) "தேஹேந்த்ரியமந: ப்ராண புத்தி விலக்ஷணமாய்" என்றதில் புத்தி சப்தார்த்தம் இரண்டுபடியாகச் சொல்ல நேர்ந்ததனால் ஒரு படியைத் தள்ளி ஒரு படியை நிர்ணயிக்க வேண்டி வந்தது. அதற்கு மூலவக்தாவின் திருவுள்ளத்தைக் கண்டறியவேண்டியது அவசியமாயிற்று. அது தத்வசேகர ஸ்ரீஸூக்தி

யினால் முதலிக்கப்பட்டது. ஆகவே அது முன்னம் காட்டப்பட்டதும், அதற்கும் ஸம்வா
தமாக ஆளவந்தார் ஸூக்தி பின்னே காட்டப்பட்டதும் மிகப் பொருத்தமாயிற்று. ஸ்ரீவசந
பூஷணத்தின் ப்ரக்ரியை இத்தகைத்தன்று. " இருவரையும் திருத்துவதும் உபதேசத்
தாலே" என்கிற சூர்ணிகை ஸந்தேஹப்ரஸக்தியற வியாக்கியானிக்கப்பட்டு முடிந்து
விட்டது. பிறகு ஸ்வதந்த்ர வாக்யமாக அவதரித்ததான "இவ்வுபதேச க்ரமம் இத்யாதி
வாக்கியத்தில் குறிக்கப்படுகிற ஆச்சான் பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையாயிருந்தால்
அவரைத்தான் முன்னே நிர்தேசித்திருக்க வேண்டும். அங்கே பிள்ளை லோகாசாரியருடைய
ஸூக்திக்கு ப்ராதம்யம் அப்ரஸக்தம். பெரிய வாச்சான் பிள்ளை ஸூக்தியைத்தான் முற்பட
எழுதவேண்டும். உண்மையில் பெரிய வாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்தியல்லாமையாலும்
பிள்ளை லோகாசார்யருக்குப் பிற்பட்ட ஆச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியேயாகையாலும்
யதாக்ரமமாகவே அருளிச் செய்தார்.

(அசித். 27) வியாக்கியானத்தில் பராசர பகவானுக்கும் பிள்ளை லோகாசார்யருக்
கும் முன்னால் ஆச்சான் பிள்ளையை யெடுத்திருப்பதாகச் சொல்லுவது மருமமறியாமை.
இங்கு விஷயமென்ன வென்றால், கார்யோத்பாதகங்களான தத்வங்கள் தம் தம் காரணத்
தினால் ஆவரிக்கப்பட்டே உத்பாதனம் செய்வதாகச் சொல்ல வேண்டியது அவசியம்
என்பதை மாமுனிகள் நிரூபித்தருளுகிறார். இதைப் பிள்ளை லோகாசாரியர் தத்வத்
ரயத்திலருளிச் செய்யவில்லை யென்பதையும் காட்டுகிறார். ஆனால் ஆச்சான் பிள்ளை
தத்வத்ரய விவரணத்திலருளிச் செய்திருக்கையாலே அது காட்ட வேண்டியதாயிற்று.
ஆகவே அது முன்னம் காட்டப்பட்டது. ஆச்சான் பிள்ளை நிர்மூலமாக அருளிச்செய்ய
வில்லை, ஸமூலமாகவேயருளிச் செய்தாரென்கைக்காக ஸ்ரீபராசர பகவானுக்தி காட்டப்
பட்டது. இப்படி ஆவரணம் சொல்லப்படவேண்டியிருக்க அதை இந்த க்ரந்தத்தில்
பிள்ளை லோகாசாரியர் சொல்லாததனால் இவர்க்கு அது அநபிமதம் என்றோ அவிஜ்ஞா
தம் என்றோ சிலர் சொல்லக்கூடுமாதலால் அதற்கு இடமறும்படி மேலே 118ஆம்
சூர்ணையை எடுத்துக்காட்ட வேண்டியதாயிற்று. ஆகவே அதையெடுத்துக் காட்டினார்.
இங்ஙனே மருமம் தெரிந்துகொள்ள முடியாமையினாலே முற்பட்டவரான பராசர பகவானை
ஆச்சான் பிள்ளைக்கும் பின்னே தள்ளிவிட்டார் மாமுனிகள் என்று சொல்ல முன்வந்தார்
கள். இங்கு எந்தவிதத்திலும் பராசர பகவானுக்கு முற்பாடு ஸம்பவிக்க முடியாதன்றோ.
ஆகவே இங்கும் க்ரம விபர்யாஸம் சங்கிக்க அவகாசமே கிடையாது.

மாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களில் மணிப்ரவாள ஸ்ரீஸூக்திகளை உதாஹரிப்பது,
ஸம்ஸ்க்ருத ஸ்ரீஸூக்திகளையுதாஹரிப்பது என்று இரண்டுண்டே; மணிப்ரவாளஸூக்திகளை
யருளிச்செய்தவர்கள் பிற்பட்டவர்களாயிருந்தாலும், தமமுடைய க்ரந்தம் மணிப்ரவாள
மாகையாலே (பிற்பட்டவர்களுடையதென்று பாராமல்) மணிப்ரவாள க்ரந்த ஸம்
வாதத்தையே முன்னம் கொள்வர். இப்படி கண்டறியவேண்டிய நியாமகங்கள் பலவுண்டு.
இவையறியாதார் " மாமுனிகளும் க்ரம விவக்ஷையின்றிக்கே ஸாதிப்பவரே " என்றால் இது
விலை செல்லாத வார்த்தையே யென்க

சதச: கண்டித்தொழிக்கப்பட்ட பூர்வ பக்ஷ வாதங்களையே ஸித்தாந்தம் போல்
திருப்பித் திருப்பிப் பேசிக்கொண்டு போதைப் போக்குவது சிலருடைய வழக்கமும் பழக்க
முமாம். ஸ்ரீ பாஷ்யத்தில் லகுஸித்தாந்தமும் மஹாஸித்தாந்தமும் அவதரித்த பின்பும்
லகு பூர்வ பக்ஷத்தையும் மஹா பூர்வ பக்ஷத்தையுமே பேசிக்கொண்டும் எழுதிக்கொண்டு
மிருந்து பாமரப்ரதாரணம் பண்ணுமாபோலே, ஸித்தாந்த வாதங்களை அடியோடு
மறைத்துப் பூர்வ பக்ஷ வாதங்களையே புந: புந: பேசிக்கொண்டிருப்பதை ஸாமான்ய ஜனங்
கள் தெரிந்துகொள்வது அரிது. ஏற்கெனவே பத்து தடவை பார்த்த விஷயங்களைப் பதி
னோராவது தடவையாகப் பார்க்கும்போது 'இது சர்வித சர்வணம், பிஷ்டபேஷணம்;
கேட்ட விஷயங்களுக்கு நேர் நின்று விடையிறுக்காமல் பழம் பாட்டையே பாடுகிறபடி'
என்று தெரிந்துகொள்ள வல்லவர்கள் மிகச் சிலரே; சர்ச்சிக்கப்படும் விஷயமென்ன? பூர்வ
பக்ஷி எதை ஆதாரமாகக் கொள்ளுகிறார், ஸித்தாந்தி எதை ஆதாரமாகக் கொள்ளுகிறார்?
பூர்வ பக்ஷி காட்டின ஆதாரங்களையெல்லாம் ஸித்தாந்தி ஒன்று விடாமல் கண்டித்தாரா?

ஸித்தாந்தி கண்டித்தவற்றையெல்லாம் பூர்வ பக்ஷி செவ்வனே தெரிந்துகொண்டு ருஜுவான வழியில் விடையிறுத்திருக்கிறாரா? என்று உட்புகுந்து ஆராய்ச்சி செய்யவல்ல மர்மஜ்ஞர்கள் ப்ரக்ருத விவாதத்தில் உபய வாதங்களையும் ஆர அமர விமர்சித்து நடுநிலையில் நின்று நிஷ்கர்ஷிக்கவேண்டும்.

## செம்மையுடைய வருளாளர் தாம் பணிக்கும் மெய்ம்மைப் பெருவார்த்தை நூற்றெட்டும் கேளீரோ !

(1) வானமாமலை, திருக்குறுங்குடி, ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரை கோயில், திருவாலி திருநகரி, திருச்சித்ரகூடம் திருமலை திருப்பதி, சென்னை, ஸ்ரீபெரும்பூதூர் முதலான தலங்களில் ஸதாசாரிய பரம்பரையில் படிந்து ஸ்வரூபக்ரந்தங்களை ஸேவித்த மஹான்கள் இற்றைக்கும் எழுந்தருளியுள்ளார்கள். (2) மதுரையிலுள்ள பண்டிதோத்தமர்கள் ஏற்கெனவே மதுரபாஷிதமென்னும் நூலின் மூலமாக ஸ்வாபிப்ராயங்களை வெளியிட்டு விட்டவர்களாதலால் அவர்களை மட்டும விட்டிடுவோம். (3) மற்ற திவ்ய தேசங்களில் வாழும் பண்டிதர்கள் இதையெல்லாம் ஆழ்ந்து பார்த்து ஸ்வஸ்வாபிப்ராயத்தை தேவஸ்தான பத்ரிகையின் மூலமாக வெளியிடட்டும். (4) வானமாமலையில் நாலைந்து வித்வான்கள் நிரூபகர்கள்; ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீ உ. வே. விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமி, வேதப்பிரான் பட்டர் கோவிந்தராஜய்யங்கார் ஸ்வாமிபோல்வாரும் நிரூபகர்கள். இவர்களில் வேதப்பிரான் பட்டர்ஸ்வாமி பூர்வசிகியுமாவர். (5) "கொள்கை கொளாமை யிலாதான் எள்கலிராகமிலாதான்" என்ற கணக்கிலே பண்டிதர்களான அனைவர் பக்கலிலும் ஸமசீலமான மனோவ்ருத்தியையுடைய நமக்கு, இதுவரையில் இந்த விவாதத்தில் கலந்துகொள்ளாத எந்த வித்வான் நிஷ்கர்ஷித்துத் தெரிவித்தாலும் உபயபக்ஷவாதங்களையும் செவ்வனே அநுவதித்து அந்யதரபக்ஷத்தில் உபபத்தியதிசயங்களை உபபாதித்து 'இந்த பக்ஷந்தான் ஸமஞ்ஜஸம்' என்று தெரிவிப்பது எதிர்பார்க்கப்படுகிறது. (6) ஸ்ரீ உ. வே. சித்ரகூடம் வெங்கடாசாரியர் ஸ்வாமி சாஸ்த்ரஜ்ஞர், ஸதாசார்ய ஸேவையில் பழுத்தவர், எந்த விவாதத்திலும் தலையிடாதவர், நிஷ்பக்ஷபாதர். ஜ்ஞானசீலவயோவ்ருத்தர். அந்த ஸ்வாமி நிஷ்கர்ஷித்தாலும் ஸம்மதமே (7) கிம்பஹுநா? தற்கால மடாதிபதிகளுள் ஸ்ரீமத் பரமஹம் ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஜீயர்ஸ்வாமி ஸகலவித பூர்த்தியுமுடையவராகையாலே அந்த ஸ்வாமி நிஷ்கர்ஷிப்பதே நன்று. ஆஸ்தான பண்டிதர்கள் மூலமாக வாகலாம்.

(8) யார் நிஷகர்ஷித்தாலும் அவர்களின் ஆராய்ச்சிக் குறிப்பாகச் சில விஷயங்கள் விஜ்ஞாபிக்கிறேன். இப்பத்ரிகையில் கீழே விவரித்துள்ள விஷயங்களுக்கு அநுபந்தமாகவே இது விஜ்ஞாபிக்கப்படுகிறது. (9) பரந்தரஹஸ்யம் முதலான எழெட்டு அபூர்வக்ரந்தங்களை விபுலமாக உதாஹரித்தருளினவர் மணவாள மாமுனிகளே. அவருடைய க்ருதிகளில், ஆச்சான்பிள்ளை, ஆச்சானபிள்ளை, ஆச்சான்பிள்ளை யென்றே பல்காலும் எடுத்தாளப்பட்ட வ்யக்தி யாவர்? என்பதே நிர்ணயிக்கபபட வேண்டியவிஷயம். (10) பரகாலநல்லான் ரஹஸ்யமென்பது பூர்வபக்ஷிகளாலும் மிகமிக ஆதரிக்கப்படுவது. அதில் சரமச்லோக ப்ரகரணத்தில் (பக்கம் 238ல்) ஸர்வதர்ம பரித்யாகத்தைப்பற்றி விபுலவிசாரம் செய்யுமிடத்தில் அருளிச் செயல்களைக்கொண்டு நிரூபித்தானபிறகு ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு நிரூபிக்கப்புகுந்து, ஆளவந்தார் முதல் ஆச்சான் பிள்ளையளவும் ஒவ்வொருவருடையவும் ஸூக்திகளைக் காட்டிவருமிடத்தில், "யாமுன முனிகள் ... பாஷ்யகாரரும் ... ஸ்ரீவத்ஸாங்காசார்யரும் ஸ்ரீபராசர பட்டரும்" என்று நால்வரை ப்ரஸ்தாவித்தபின் "அபயப்ரத குருஸூநுவான ஸுந்தரவர ராஜாசார்யரும்" என்று தொடங்கி "இதுக்குத் தாத்பர்யமாகவருளிச் செய்தார்" என்று எட்டு வரிகள் எழுதியுள்ளார். அந்த தாத்பர்யார்த்தம் பரந்தரஹஸ்யத்தின் சரமச்லோகாவதாரிகையின் முடிவிலுள்ளது. இங்கு ஆச்சான்பிள்ளை யென்றெழுதாமல் "அபயப்ரத குருஸூநு" என்று வெட்ட வெளிச்சமான நிர்தேசம்பண்ணினர். இதைவிட வேறு கண்ணாடிவேண்டுமோ? இங்கே அபயப்ரதராஜார்யரான பெரியவாச்சான் பிள்ளையை ஏன் சொல்லிற்றிலர்? என்று கேட்டுப் பார்க்கவேணும்.

11. கீர்த்திமூர்த்தியான அயோத்யா ராமாநுஜஜீயர் ஸ்வாமி "பரந்தரஹஸ்யம் அபயப்ரதராஜபுத்ரருடையதேயன்றி அபயப்ரதராஜருடையதன்று" என்று ஸாதித்திருப்பதற்கு இந்த பரகாலநல்லான் ரஹஸ்யமே முக்கியமான மூலாதாரமென்னத்

தட்டில்லை. (12) அந்த ஸ்வாமி, தமக்குத் தலையெடுக்கவொண்ணாதபடி செய்திட்டாரே யென்கிறசோகம் கோபமாகப் பரிணமிக்கப்பெற்ற பூர்வ பக்ஷி அவரை வாசாமகோசரமாக நிந்திக்கப்புறப்பட்டு "ப்ரயோஜநாந்தரத்திற்கும் உபாயாந்தரத்திற்கும் வாசி தெரியாமல் எழுதிய அவிவேகியாக நிந்தித்திருப்பது காண்கிறது. (13) திருமழிசை அண்ணாவப்பங்காரைச் சதுச்சாஸ்திர பண்டிதராகப் புகழ்ந்திருக்குமவர்கள் அந்த திருமழிசை ஸ்வாமி திருச்சந்த விருத்தத்திற்கு எழுதிய வுரையைக் கண்டால் அவரையும் தூஷிக்க தீக்ஷைகொள்ள வேண்டியதே. (14) அதில் பாட்டு 19, புள்ளதாகி வேதநான்குமாய் — இதில் 'புள்ளையூர்தி' என்பதற்கு "திருவனந்தாழ்வானை வாஹனமாக நடத்தா நின்றாய்" என்பது அண்ணாவப்பங்காருரை. இவ்வுரை 1915ஆம் ஆனந்த ஸம்வத்ஸரத்தில் ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையாரால் அச்சிடப்பட்டு உலகம் பரவியுள்ளது. (15) புள் என்பதற்குத் திருவனந்தாழ்வானென்கிற பொருள் யுக்தந்தானா? என்று கேட்டால் "அவர் பெரிய வித்வானாச்சே, அவர் இப்படியொருகாலும் எழுதியிருக்கமாட்டார், அச்சுப்பிழையே இது" என்பர் பூர்வ பக்ஷி. உபாயாந்தரமென்பது ப்ரயோஜநாந்தரமென்று விழுந்திருப்பதும் இங்ஙனமேயென்று கொள்வதை அஸூயாதேவி தடுத்திடுவளாதலால் நிந்தையே தஞ்சமாகிறது.

(16) பூர்வாசார்யர்களென்கிற வ்யபதேசம் மணவாள மாமுனிகளோடு முடிந்திட்டது; அவர்க்குப் பிற்பட்ட ஆசார்யர்கள் அடியேனுடைய திருத் தகப்பனாரோடு குலகூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கராசார்யரோடு வாசியற ஸர்வாத்மநா ஆதரணீய வாக்குக்களல்லர். மாமுனிகளின் ஸூக்திகளுக்கு அவிருத்தமாயிருந்தால் கொள்ளுவோம். இல்லையெனில் தள்ளுவோம். எம்பெருமானார், ஆழ்வான், பட்டர், நம்பிள்ளை முதலானாருடைய திவ்ய ஸூக்திகளுக்கும் இவ்வேற்றமுள்ளதே. (17) ஆக, மாமுனிகளுக்குப் பிற்பட்ட அண்ணாவப்யங்காரையோ, அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியையோ, ஸ்ரீ வைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷாதி கர்த்தாக்களையோ நாம் ஸர்வாத்மநா ப்ரமாண பூதர்களாகக் கொள்ளுவோமல்லோம். (18) அந்த நவீனர்களுங்கூட பரந்த ரஹஸ்யத்தை ஆச்சான் பிள்ளைக்ருதியென்றார்களேயொழிய, பெரியவாச்சான் பிள்ளை க்ருதியென்று ஒருவரும் எழுதிற்றிலர். (19) ஏதோ வொரு மூலையில் யாரோ வொருவர் அப்படி யெழுதியிருக்கிறாரென்று காட்டினாலுங்கூட மாமுனிகளின் திவ்ய ஸூக்திகள் கதிராயிரமிரவி கலப்தெரித்தாலொத்து விளங்க, அதன் கீழே அவை இருள் படும்பாடே படுமத்தனை.

(20) மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென்று ஸாதித்துள்ள விடங்களிலெல்லாம் பெரியவாச்சான் பிள்ளையே விவக்ஷிதர் என்பது பூர்வபக்ஷி வாதம். இதன்படிக்குப் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளென்று நிர்விவாதமாகத் தேறியிருக்கும் க்ரந்தங்களையெல்லாம் இவர்கள் ஆச்சான் பிள்ளை ஸூக்தியாகவே அச்சிட்டு விட ஒரு தடையுமில்லையே. (21) புதிதாக சிரமப்பட்டு ஸம்பாதித்து அச்சிட்டதாகச் சொல்லப்படுகிற தத்வத்ரய ஸங்க்ரஹம் ஆச்சான் பிள்ளையின் க்ருதியாகவே தங்களுக்குக் கிடைத்ததாக வெளியிட்டுவிட்டு, தாங்களாகவே பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்ததாக வெளியிட்டது மிகப்பிசகல்லவா? ஓலையேடுகளில் ஆச்சான் பிள்ளையின் க்ருதியாகவே காண்கிறதென்று தாங்களே வெளியிட்டுவிட்டுத் திருநாம மாறுபாடாக அச்சிடுவது ப்ரத்யக்ஷவிப்ரலம்பமல்லவா? (22) ஆச்சான்பிள்ளை சப்தமும் பெரியவாச்சான்பிள்ளை சப்தமும் பர்யாயமேயாதலாலும் மணவாள மாமுனிகளுக்கும் இப்படியே திருவுள்ளமாகையாலும் ஓலையேடுகளில் ஆச்சான் பிள்ளையென்றிருந்ததை வேணுமென்றே பெரியவாச்சான்பிள்ளை யென்று திருத்தினோம்" என்று இவர்கள் சொல்லவேண்டும். மேலே குறித்த இரண்டு ஹேதுக்களும் வர்ஷசதமானாலும் ஸாதிக்க முடியாதவை; ஸர்வாத்மநா அஸித்தங்களே. (23) ஓலையேடுகளில் கண்டதாகத் தாங்களே தெரிவிக்கிறபடி "ஆச்சான்பிள்ளையருளிச் செய்த தத்வத்ரய ஸங்க்ரஹம்" என்றே பிரசுரம் செய்துவிட்டு, ஊர்தோறும், மனைதோறும் ஆள்களையனுப்பி "ஆச்சான்பிள்ளை யென்றது ஆச்சான் பிள்ளையையன்று, பெரிய வாச்சான் பிள்ளையை" என்று பறைசாற்றச் செய்திருக்க வேண்டும். (24) ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி முதலான நமது நூல்கள் யாவும் காருள்ளளவும், கடல் நீருள்ளளவும், வேதமுள்ளளவும், வேதகீதனுள்ளளவும் ஆத்திகர் சென்னிக்கு அணியாக விளங்குமவை. (25) ஷோடசர் என்று பட்டம் பெறுவிக்கவே தோன்றிய சிலக்ஷுத்ரக்ருதிகள் அன்றே தொலைந்தன.

(26) தத்வத்ரயஸங்க்ரஹத்தை மாமுனிகள் தெரட்டவரேயல்லர். (27) வேதாந்தவாசிரியர் சில்லரை ரஹஸ்யங்களில், ரஹஸ்ய ரத்னவளீ, ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயம் என்ருப்போலே மூலத்தையும் விவரணத்தையும் தாமே செய்தது போலே ஆச்சான்பிள்ளை தாமே தத்வத்ரய ஸங்க்ரஹத்தையும் தத்வத்ரய விவரணத்தையும் அருளினரென்கிறதத்துவமே தேறி நின்றது. (28 மணவாளமாமுனிகள் பலகால் உதாஹரித் தருளின தத்வத்ரய விவரணக்ரந்தம் எப்படிலுப்தமோ, அப்படியே பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததான தத்வ விஷயகக்ரந்தமும் லுப்தம். (29) முன்னுக்கும் பின்னுக்கும் முரண் படுவனவும் அநந்விதங்களுமான வாக்யங்களை நிரப்பும் நைபுண்யம் அத்விதீயமே யிவர் களுக்கு. (30) பரந்தரஹஸ்யாதி கர்த்தா பெரியவாச்சான் பிள்ளையே" என்றெழுதக் கைவராமல் "பெரிய வாச்சான் பிள்ளையாகவேயிருக்கமுடியும்" என்றெழுதின போதே விவேகிகளுக்கு விஷயம் புரிந்து விட்டதல்லவா?

(31) குலசேகரப் பெருமாள் "உம்பருலகாண்டு ஒருகுடைக் கீழுருப்பசிதன், அம் பொற்கலையல்குல் பெற்ருலுமாதரியேன்" என்றதனுல் உருப்பசிதன் அம்பொற்கலையல்குல் தமக்குக் கிடைக்கப் போகிறதென்றதாக அர்த்தமாகாது. ஒருகாலும் கிடைக்கமாட்டா தென்பதே பொருள். அது போலவே மாமுனிகளே நேரில் ஸேவை ஸாதித்துப் பெரியவாச் சான் பிள்ளையைத்தான் ஆச்சான்பிள்ளையென்று ஸாதித்தேனப்பா என்று ஸாதித் தாலுங்கூட என் மனங் கொள்ளாது" என்ற நமது வார்த்தை நம் உறுதியொன்றையே காட்டிநிற்குமத்தனை. (32) வெற்றிகொள்ள முடியவில்லையென்றும் வெற்றி காணமாட்டா லென்றும் எழுதி யெழுதி அழகு பார்த்து அகமகிழ்வதில் என்ன தடையிருக்கமுடியும்? ராவ ணாதிகள் மாளுந் தனையும் சொல்லிக்கொண்டிருந்த வார்த்தைதானேயிது விடையிறுக்க வேண்டிய விஷயங்களில் உலக நன்மையொன்றையே கருதி ஒரு நாளும் விரக்தியடையோம். (33) நம் வாழ் நாளுள் எவரையில் ஓர் அபார்த்தமும் தலைகாட்டமாட்டா தென்பதை ஸ்ரீமத் பரமஹம்ஸ திருக்குறுங்குடி சின்ன ஜீயர் ஸ்வாமி பேரருள் நிரம்பிய திருமுகத்தினுல் அதி ஸமீபகாலே அநுக்ரஹித்தருளியுள்ளார். (34) 'அதுஸித்திக்கிறது, இது ஸித்தித்துவிட்டது. அது தேறுகிறது, இது தேறிவிட்டது. அதை நிரஸித்தோம, இதை நிரஸிப்போம். அது ஸ்பஷ்டமாயிற்று, இதுவும் ஸுஸ்பஷ்டமாயிற்று" என்றெழுதுவதெல்லாம் "இரவில் இருள் மிக மிகக் காண்கையாலே இரவிலும் ஸூர்யன் ஜ்வலிக்கிருனென்பது விளங்கிற்று" என்றெழுதுவதோடு வாசியற்றதே. (35) தத்வத்ரயம் அசித் 27ன் வியாக்கியானத் திலுள்ள திவ்ய ஸூக்திகளால் ஆச்சான் பிள்ளை பெரியவாச்சான் பிள்ளையிலும் வேறுபட்ட வரென்று தெரிகிறது – என்று நாமெழுதியிருக்கவில்லை; இந்த அநுவாதம் தவறு. வேறுபட்டவரென்று கல் வெட்டாகிறது என்பதே நமது வாக்கு. (36) பெரிய வாச்சான பிள்ளை ஸாதித்த சுருக்கமான தொரு தத்வத்ரய க்ரந்தத்திற்கு ..... இத்யாதியும் நாமெழுதினதன்று. பொய்யான ஆரோபணம் (37) நம்முடைய வாதத்தை தத்வத்ரய ஸங்க்ரஹ நூல் அடியறுக்கிற தென்றபோதே ஒரு தத்துவம் வெளியாயிற்று. (அதாவது) இச் சிறுநூல் அடியறுக்கிறதென்றே கொண்டாலும், இப்போதே இது வெளி வந்தபடியால் கீழே 15வ ருஷ காலம் நமது வாதம் வெற்றி பெற்றிருந்ததாகப் பூர்வ பக்ஷியே இசைந்ததாயிற்று. ருஜுவான முறையில் வெளிவராத இச்சிறுநூல் பூர்வ பக்ஷியின் வார்த்தையையே வேரோடு களைந்திட்ட தென்பது புநருக்தம. (38.) மாமுனிகள் ஆச்சான் பிள்ளை யென்று நிர்தேசிப்பதெல்லாம் அபயப்ரதராஜஸூநு வொருவரையேயன்றி வேறு எவரையு மன்றென்பது கல்வெட்டு. (39) மயங்கவைத்தல் மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி களில் அணுவளவும் கிடையாதென்று ஆயிரம் விசை கூறினுலும் புநருக்தி தோஷம் வாராது. (40) அப்ரஸித்தர்களும் ஆசார்ய பரம்பரையில் சேராதவர்களுமான சில முன்னோர் கள் ஒழுங்குபட எழுதத் தெரியாமல் சில நூல்களை யெழுதி வைத்திருப்பதுண்டு; அத் தகைய நூல்களே பூர்வ பக்ஷிகளுக்குப் புகலாகும்.

(41) மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்தே பரந்த ரஹஸ்யாதிகளை நாம் அறிகிறோம்; ஆகவே மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளே இதில் நமக்குத்தஞ்சம்.

(42) மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைத் தமக்கு நஞ்சாகவே நிலையிட்டிருக்கிறார்கள் பூர்வபக்ஷிகள். (43) அகச்சான்று புறச்சான்று என்பதெல்லாம் ப்ரக்ருத விஷயத்தில் மந்தர்களையும் மயக்கமாட்டாதவை. (44) பரகால நல்லான் ரஹஸ்யத்தில் 54, 97, 116, 190. பக்கங்களில் ஆச்சான் பிள்ளை வார்த்தைகளை யெடுத்திருந்தும் ஒன்றுக்கும் ஆகரம் காட்டப்படவில்லை. இத்தன்மை மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் ஓரிடத்திலும் இடம் பெறாது. (45) ஆச்சான் பிள்ளை யென்கிற அபயப்ரதராஜஸூநுவுக்கு ப்ரஸித்தி விளைவதற்கு முன்னே பெரியவாச்சான் பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்றே வ்யபதேசித்து வந்தார்களென்பதை மறுப்பாரார். (46) வார்த்தா மாலையெழுதிய பின்பழகிய 'பெருமாள் ஜீயர் யாமுநஸூநுவை யறிந்தவரேயல்லது அபயப்ரதராஜஸூநு வென்கிற யாமுநஸூநு ஸூநுவை அறிந்தவரேயல்லர். ஆகவே அவர் நாலாயிர வ்யாக்க்யாதாவான அபயப்ரதராஜார்யரைப் பெரிய என்கிற விசேஷணமிட்டெழுத ப்ரஸக்தியேயில்லையாயிற்று. (47) பரகால நல்லான் பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான் பிள்ளையென்று குறிப்பிட்டிருக்கிறாரென்பது தவறு. (48) இவர் பரந்த ரஹஸ்யத்திலுள்ள அர்த்தங்களை யெடுத்து அபயப்ரத ராஜஸூநு பணித்ததாக (பக்கம் 238ல்) காட்டியிருப்பதை இன்னமும் அபலபிப்பது அநீதி; அந்த இடம் இந்த விவாதத்தை நன்கு அறுத்து விட்டது. (49) அந்த இடத்திலும் அவர் ஆச்சான்பிள்ளை யென்றே எழுதிவைத்திருந்தாராகில் வீண் விவாதத்தை இன்னமும் வளர்த்திக்கொண்டு கிடக்கலாம். தெய்வமேயன்றோ அங்கு அவர் கையால் அபயப்ரத குருஸூநுவென்று எழுதுவித்தது. (50) பரகால நல்லானில் அந்த ப்ரகாணத்தில் நிரூபிக்கப்பட்டு வரும் விஷயத்திற்கு அபயப்ரதராஜரான பெரியவாச்சான்பிள்ளையின் நூலில் நிரூபணமேதுமில்லையென்று தேறினபோதே பெரியவாச்சான் பிள்ளை ரஹஸ்யப்ரஸ்தானத்தில் விரிவான நூல் எதுவுமருளிச் செய்திலர் என்பது சிலாலிகிதமாக்கப்படவில்லை. யா?

(51) ஸ்ரீயாமுநார்ய பாஷ்யகார ஸ்ரீவத்ஸாங்கமிச்ரர்கள் ரஹஸ்யக்ரந்தமெதுவும் அருளிச்செய்யாமலிருந்தாலும் ரஹஸ்யார்த்தஸ்போரகங்களான ஸ்ரீஸூக்திகளை ஸாதித்திருக்கிறார்களென்று காட்டும் பரகாலநல்லான், அப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளைக் கூட பெரியவாச்சான்பிள்ளை ஸாதித் திருக்கவில்லையென்று காட்டிவிட்டாரே. (52) அவ்வாசார்யச்ரேணியில் பெரிய வாச்சான்பிள்ளையை அடியோடு புகுத்தாதது அபலபிக்க முடியாதன்றோ. (53) ஆகவே பெரியவாச்சான் பிள்ளை ரஹஸ்யார்த்த ப்ரபஞ்சனபத்ததியில் இறங்கினவரேயல்லரென்பதை உபதேச ரத்தினமாலைக்கு மேலாகப்பரகாலநல்லான் விளக்கி விட்டாரென்னத்தட்டில்லை. ஆக, பரந்த ரஹஸ்யத்திற்கும் பெரியவாச்சான் பிள்ளைக்கும் ஸம்பந்தகந்தமும் கிடையாதென்பது முடிவுபெற்றது. (54) பிள்ளை லோகாசார்யர் ரஹஸ்ய த்ரய விவரணமாக நான்கு ரஹஸ்யங்கள் ஸாதித்தவர். பெரிய வாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யம் ஸாதித்திருந்தால் இது ஒன்றேயாதலாலும் வேறொன்று இல்லாமையாலும், இது அஷ்டாதச ரஹஸ்யங்களுக்கு நெடுநாள் முன்னமே அவதரித்ததென்கிற காரணத்தினால் இதற்கு ப்ரசாரம் முன்னமே ஏற்பட்டிருக்கவேண்டும். முன்னு மேற்படவில்லை, பின்னு மேற்படவில்லை. ஆகவே இதற்குச் சொல்லப்படும் ஸமாதானம் மிகமந்தம். (55) ஆளவந்தாருடைய ஸித்தித்ரயமும் ஸ்ரீ பாஷ்யமும் துல்யமாகாது. ஸூத்ரபாஷ்யத்வேந உள்ள ப்ராதாந்யமன்றோ ப்ரபலம். (56) சதுச்ச்லோகிக்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் ஸாதித்திருந்தால் ஆச்சான் பிள்ளை அதில் கைவைத்திருக்கவேமாட்டார். (57) பெரியவாச்சான் பிள்ளை வாழ்ந்த காலத்தில் வேதாந்தவாசிரியருடைய நூல் எதுவும் அவதரித்ததில்லை. இது தனிப்பட்ட விசாரம். ஆச்சான் பிள்ளைக்கும் வேதாந்தவாசிரியர்க்குமே பரஸ்பரம் வாதப்ரதிவாதங்கள் க்ரந்த மூலமாக நடந்திருக்கின்றனவென்பது ப்ரபல ஸாக்ஷிஸநாதம். (58) நாமெழுதுகிற க்ரந்தங்கள் நம்முடைய பெயராலேயே வெளிவந்துகொண்டிருக்கின்றன. பிறரெழுதும் க்ரந்தங்கள் பிறர் பெயரால் வருகின்றன. ஸ்ரீ. உ. வே. திருக்கண்ணபுரம் ஸ்வாமியும், ராவ் சாஹிப், S ராகவையங்கார் ஸ்வாமியும் பல நூல்களையும் பல வியாஸங்களையும் பூர்வபக்ஷிகளுக்குக் கண்டனமாக நேர்கொடு நேரே எழுதியனுப்பியிருப்பதும், கோயில் திருமஞ்சனம் ஸ்வாமி நேர்முகமாகவே கண்டித்ததும் அபலபிக்க முடியாமலிருக்க, பாமரவஞ்சகமாக எதையோ எழுதுவது மிகவும் அநீதி.

Rgd. No. 2975



கிடைக்குமிடங்கள் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) V. GOPALSWAMI,
17, பண்டி வெங்கடேச நாய்க்கன் தெரு, திருவல்லிக்கேணி.

(4) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

ஸ்ரீ உ. வே. வங்கீபுரம் ராகவாசாரியார் ஸ்வாமி



120. Sri Vanjipuram Raghavacharya,
MELKOTE. (Mysore).

Melkote

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L Kancheepuram.